# Kalki Shopping Page



SHOWROOM 1
EXCLUSIVE
**BINNY's**

**Entire range of BINNY TEXTILES including silks.**



**VENKATESH VASTRALAYA**
P. LTD.

State Bank of Mysore Blg.
Opp. High Court,
Madras 600 001
Phone: 20201/2

---

Admired for beauty
Bought for performance

**Bharat TV**
**Urvashi**



*Available at:*
**VIVEK & CO**
Purasawalkam, Madras-600 007
Phone: 662462/663545
Mylapore, Madras 600 004
Phone: 76923/75661.

ACIL BT 17/79

---

Admired for beauty
Bought for performance

**Bharat TV**
**Urvashi**



*Available at:*
**TV TRONICS**
7, Sunkurama Chetty St
Madras 600 001 Phone 27427
74/1 Siruvallur Road
Perambur, Madras 600 011
Phone: 666132 (PP)

ACIL BT 18/79

---

**Buy the Best VV Vest**

Fully fashioned VV Vests are designed to suit any age every chest!

Available in all leading stores



VV Vests & Agencies
76, Appu Mudali Street,
Mylapore, Madras-600 004
Phone: 72652

# வட்டமேஜை

# ஹிந்தி — தவிர்க்க முடியாத தீமை!

● தலையங்கத்தில் மாநிலங்களில் அந்தந்தப் பிராந்திய மொழி ஆட்சி மொழியாக இருக்கட்டும் என்று எழுதியிருப்பதை ஒத்துக் கொள்கிறேன். ஆனால் அதற்கு அடுத்தபடியாக மத்திய அரசின் ஆட்சி மொழியாகவும், மாநிலங்களுக்கிடையே தொடர்பு மொழியாகவும் ஆங்கிலமே நீடிக்க வேண்டும் என்று எழுதியிருப்பதைஒத்துக் கொள்ளஇயலவில்லை.

மாநிலங்களில் வழங்கும் அனைத்து மொழிகளும் மத்திய அரசின் ஆட்சி மொழியாகவும், தொடர்பு மொழியாகவும் விளங்க வேண்டும் என்பதே ஜனநாயகத்தை விரும்பும் இந்திய மக்களின் விருப்பம். இதை நடைமுறைப் படுத்தும் முன் நேரு வழங்கிய ''ஹிந்தியுடன் ஆங்கிலமும் தொடர்ந்து நீடிக்கும்'' என்ற உத்தரவாதத்தைக்கண்டிப்பாய் அமுல்படுத்த வேண்டும். மொழி பெயர்ப்புக்கு ஏற்படும் செலவு, மொழிப் பிரச்னையால் ஏற்படும் குழப்பங்கள், பொருட் சேதங்கள், உயிர்ச் சேதங்கள் இவற்றோடு ஒப்பிடும் போது குறைவாகவே இருக்கும்.

மதுரை—10 க. இராமலிங்கம்

● மத்திய அரசு ஆட்சிமொழிப் பிரச்னை பற்றித் தாங்கள் எழுதும் போதெல்லாம் மாறுபட்ட கருத்தை எழுதும் நா. திருமலை மீண்டும் எழுதுகிறேன். உங்கட்கு வேண்டு கோள் விடுக்கிறேன். பிரிவினைவாதிகள் என்ற நச்சுப்பாம்புக்குப் பால் வார்த்து வீட்டில் வளர்க்காதீர்கள். உங்களை நீங்களே பலி கொடுக்காதீர்கள். காட்டாற்று வெள்ளம் (பிரிவினை இயக்கம்) வளர்ந்து வந்தபின் கல்கி அதை எதிர்க்கும் அணியில் முன்னணியில் நின்றாலும், பயனில்லை. வருமுன் காப்பது தான் அறிவுடையோர் செயல். பிரிவினை வருமுன் தடுக்க, ஆங்கிலமே மத்திய அரசின் ஆட்சி மொழியாக நீடிக்கட்டும் என்ற உங்களது பழைய பல்லவியைப் பாடலாம். ஆனால் அது பலனளிக்காது. இதுவரை பயன் தரவில்லை என்பதனால்தான் ஒற்றுமைக்காகத் தவிர்க்க முடியாத தீமையாக இந்தியையும் மத்திய அரசின் ஆட்சி மொழியாக ஒப்புக் கொள்ளவும் என எழுதி, பிரிவினை இயக்கம் பரவுமுன், ஒற்றுமையைக் காப்போம் என்கின்றேன்.

மதுரை நா. திருமலை

● தியாக வல்லபன் தொடர்கதைக்கு ஓவியர் வரைந்துள்ள அட்டைப் படத்தைக் கண்ணுற்றதும் அந்த இனிய தொடர் கதை 25.3.79 இதழிலேயே இடம்பெற்று இருக்காதா என ஏங்க வைத்தது.

சென்னை—5 குடந்தை ராமன்

● சென்ற மாத மத்தியில் ஓர் அலுவல் நிமித்தம் — அன்பில் கிராமம் (திருச்சி ஜில்லா) சென்றிருந்தேன்.

தோப்புகளில் நடுவிலேயே — சிறிது கூட மறைவின்றி — கள், சாராயம், பிராந்தி முதலியவை பகிரங்கமாகவே விற்கப்படுகின்றன. இங்கு மதுவிலக்கு தீவிரமாக அமல் படுத்தப்படுகிறது என்ற நினைவுக்கே இடமில்லாத வகையில் மும்முர வியாபாரம் நடக்கிறது. காக்கி உடுத்த ஒரு நபர் மாமூல் பெற்றுச் சென்றார்.

நெய்வேலி மணக்கால் கைலாசம்

● ''மாமனிதர்கள் சங்கம்'' பற்றித் தாங்கள் எழுதியதைப் படித்தேன். சில மாதங்களுக்கு முன் ஒரு ரோட்டரி சங்கத்தின் ஆண்டு வரவு செலவுக் கணக்கைப் பார்க்க நேர்ந்தது. அதன் வருமானம் ரூ 18000. பல்வேறு நற்பணிகளுக்குச்செலவானது ரூ. 1112தான். Giants உம் அப்படியிருந்து விடக் கூடாது என விரும்புகிறேன்.

திருச்சி கோ. வன்மீகநாதன்

● ''ஜனநாயகம் இருக்கிறது. ஆனால் ஜனநாயகப் பண்புகளை நாம் மறந்து விட்டோம்'' என்கின்ற தலையங்க வைரக் கருத்திற்கு எத்தனை பேர் வக்காலத்து வாங்கப் போகிறார்கள்? ஒரு கட்சி இன்னொரு கட்சியின்மேல் காழ்ப்புணர்ச்சிகளைக் காட்டியே காலந்தள்ளி விடுவதில்தான் பாரத நாட்டு ஜனநாயகம் தற்போது செயல்பட்டு வருகிறது.

பெங்களூர்—21 ப. மூர்த்தி

● இதழுக்கு இதழ், தரத்தில் ''கல்கி'' முன்னேறுகிறது. பழமையில் உள்ள நல்லதும் புதுமையில் உள்ள எழுச்சியும் இரண்டறக் கலந்து, வாராந்திர விருந்தாகிறது.

இயக்குனர் திலகம் பாலசந்தரின் பேட்டி கருத்தாழம் கொண்டது. அசாதாரணமான தன்னம்பிக்கையும் ஒரு சீரான லட்சியமும், அவரைத் தென்னிந்தியத் திரை உலகில் மிக உயர்ந்த இடத்தில் வைத்து விடுகின்றன.

தில்லி—22 தமிழ்ச்சங்க பாலு

● எழுத்தாளர் ஏகாம்பரம் அவர்களே! இந்த வாரம் (25.3.79) உம்முடைய சினிமா ஆட்டம் மிகவும் ஜோர்! இனி வரும் இதழில், சினிமா ஆட்டத்துடன் அரசியல் ஆட்டத்தையும் சேர்த்துக் கொள்ளும்!

சென்னை என். குமார்

● கிழக்கும் மேற்கும் படத்தின் விமர்சனத்தில் விமர்சகர் — 'திரை உலகம் பிற மதத்தினரிடம் கத்திமுனையில் பழிவிட்டுப் பிராமண குலத்திடம் மட்டும்...?' என்ற கேள்வியை எழுப்பியிருப்பது சிந்தனையைத் தூண்டுகிறது.

விருத்தாசலம் தங்கபாலு




# கலைஞரிடம் சில கேள்விகள்

[கேள்விகள் நம்முடையவை. பதில்கள் கருணாநிதியுடையவை. சிந்தித்துப் பார்த்துப் பதில்களை ஏற்பதும் ஏற்காததும் வாசகர்களின் தனி உரிமை.]

**கேள்வி:** சென்ற பொதுத் தேர்தல் சமயத்தில் தி. மு. க. மக்களின் ஆதரவை முன்பை விடக் குறைவாகப் பெற்றதற்கு முக்கியமான காரணங்களாக எந்த இரண்டைக் கருதுகிறீர்கள்?

**கலைஞர்:** 1976 ஜனவரி இறுதியில் கழக ஆட்சி, கலைக்கப் பட்டதைத் தொடர்ந்து குடியரசுத் தலைவர் ஆட்சியின் போது தி. மு. க. மீது எல்லை கடந்த நிலையில் அவதூறு பிரசாரத்தை அரசாங்கச் சார்பிலும், அரசாங்கச்செலவிலும், ஏடுகளிலும்-வானொலியிலும் திட்டமிட்டுச் செய்தனர். அவற்றை மறுத்து எழுதவோ பேசவோ எங்களுக்கு உரிய வாய்ப்புக்கள் அளிக்கப்படவில்லை. கடந்த பொதுத் தேர்தலில் எங்கள் தோல்விக்கு அது ஒருகாரணம்.

பொதுவாகவே ஜனநாயகத்தில் ஒரு கட்சியின் ஆட்சியில் மக்களுக்குத் தேவையான சாதனைகளை எவ்வளவோ செய்திருந்தாலுங்கூட, மற்றொரு கட்சி ஆட்சிக்கு வந்தால் அதைவிட அதிகச் சாதனைகள் நடைபெறும் என்று வாக்காளர்கள் எதிர்பார்ப்பது இயல்புதான்! அதில் கிடைத்த ஏமாற்றத்துக்குப் பிறகுதானே; வாக்காளர்கள் தாங்கள் செய்துவிட்ட தவறு அதுவென உணர முடிகிறது. அப்படி ஏராளமான தேர்தல் வாக்குறுதிகளையும், அறிவிப்புக்களையும் செய்து பல கட்சிகளுடன் உடன்பாடும் செய்து கொண்டு இன்றுள்ள ஆளுங்கட்சி வெற்றிபெற்றது. இது இரண்டாவது காரணம். எந்தத் தோழமைக் கட்சியின் துணையுமின்றிக் கடந்த தேர்தலில், தி. மு. க. நாற்பத்து இரண்டு லட்சம் வாக்குகளைப் பெற்றுள்ளது என்பது அலட்சியப்படுத்தக் கூடிய ஒன்றல்ல!

**கேள்வி:** தி. மு. க. மறுபடியும் ஆட்சியமைக்க மக்கள் வாய்ப்பு அளிப்பார்களானால் மக்களுக்குத் தாங்கள் செய்யும் முக்கியமான மூன்று பணிகள் எவையாக இருக்கும்?

**கலைஞர்:** தமிழ் நாட்டின் பொருளாதார வளர்ச்சி விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதைப் புறக்கணிக்காமல் அந்த முனையில் எங்கள் முழுக் கவனமும் செலுத்தப்படும்.

ஒப்பற்ற சாதனைகள் புரிந்த ஒளிமிகுந்த ஒன்பதாண்டு காலக் கழக ஆட்சியில் எந்தெந்தக் குறைபாடுகள் இருந்தன என்பதை தாங்கள் உணர்ந்திருக்கிறபடியால் அவற்றை மறந்து விடாமல், அக்குறைகள் மீண்டும் தலைதூக்காமல் எச்சரிக்கையுடன் இருப்போம்.

இன்றுள்ள ஆட்சியைப் போல் ஆளுங் கட்சிக் காரர்கள் சட்டத்தைக் கையில் எடுத்துக் கொண்டு ஆட்டம் போடுகிற நிலையை அனுமதிக்க மாட்டோம்.

**கேள்வி:** தி. மு. க. வுக்கும் அகில இந்திய அ. தி. மு. க.வுக்கும் உள்ள முக்கிய கொள்கை வேறுபாடாக எதைக் கருதுகிறீர்கள்?

**கலைஞர்:** தி. மு. க.வில் கொள்கை குறிக்கோள் இருப்பதும் — அ. தி. மு. க.வில் அப்படி எதுவும் இல்லாததும்தான் முக்கியமான வேறுபாடாகும்.

கேள்வி: தி. மு. க. ஆட்சியில் ஊழலும் லஞ்சமும் மலிந்து கிடந்ததாகக் கூறப்பட்டது. 'ஊழலற்ற அரசு அமைத்துள்ளோம்' என்று கூறுகிறார் தற்போதைய தமிழக முதல்வர். உங்கள் அபிப்பிராயம் என்ன?

கலைஞர்: காமராஜர் ஆட்சியை ஊழல் ஆட்சி என்று இராஜாஜி குறிப்பிட்டார்! இராஜாஜி ஆட்சி மட்டுமென்ன பரசுராமர் ஆட்சியா? என்று காமராஜர் கேட்டார்! ஆனால் எல்லோரையும் விட ஊழல்பற்றி அதிகமாகப் பேசிய இன்றைய முதல்வருடைய ஆட்சியில் ஊழல் என்பது அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாக இருக்கிறது.

கேள்வி: அனைத்தைவிட மிக மிக முக்கியமான பிரச்னைகள் இருக்கும் தற்போதைய நிலையில் தமிழ் மொழி சீர்திருத்தம் அவசியம்தானா?

கலைஞர்: தமிழ்மொழி சீர்திருத்தம் அவசியமற்றது என்று நான் நினைக்கவில்லை. அதற்காக அந்தச் செயல் "அவசரக் கோலம் அள்ளித் தெளி" என்று ஆகிவிடக் கூடாது என்பதில் எனக்கு ஆழ்ந்த உணர்வு உண்டு.

கேள்வி: இந்தித் திணிப்பு என்பது ஒவ்வொரு தமிழனும் கவலைப்பட வேண்டிய அம்சம். அப்படியிருக்க தி. மு. க. வேறாகவும், அ. இ. அ. தி. மு. க. வேறாகவும் இந்தி எதிர்ப்பு மாநாடுகளை நடத்துவது எவ்விதத்தில் சரியானது? இப்பிரச்னையை அரசியல் பிரச்னையாக ஆக்காமல் சமுதாயப் பிரச்னையாக அணுகுவது அவசியம் இல்லையா?

கலைஞர்: அ. தி. மு. க. இந்தி எதிர்ப்பு மாநாடு நடத்தியதென்று தங்களுக்கு யார் சொன்னது? வீர வணக்க நாளை யல்லவா அவர்கள் மாநாடாக நடத்தினார்கள். தமிழ்நாட்டில் இந்தி எதிர்ப்பு என்பது நாற்பதாண்டுக் கால வரலாறு! அந்தக் களத்தில் தீவிரமாக நிற்கும் சிப்பாய் தி. மு. கழகம்! இது ஓர் அரசியல் பிரச்னையாகவும் இருப்பதற்குக் காரணம்; அரசியல் சட்டத்தின் மூலம் இந்தி ஆதிக்கத்துக்கு வழி வகுப்பதுதான்! தமிழ் நாட்டு மக்கள் அத்தனை பேருக்கும் பொதுவான பிரச்னை இது என்பதில் எங்களுக்கு மாறுபட்ட கருத்தில்லை. இருந்தாலும் பூனைக்கு யார் மணி கட்டுவது என்ற கேள்வி எழுந்தபோது அதற்குத் தயார் என்று புறப்படுவது தி. மு. க. வாகத்தானே இருக்கிறது!

கேள்வி: மாநகராட்சித் தேர்தல் தள்ளிப் போடப்பட்டுக் கொண்டே இருப்பதற்குக் காரணம் என்னவென்று தாங்கள் கருதுகிறீர்கள்?

கலைஞர்: இன்றுள்ள ஆளுங்கட்சி, தனக்குச் சாதகமான சூழ்நிலை சென்னை நகரில் எப்போது அமையும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.




கேள்வி: ராஜாஜி அவர்களால் மதுவிலக்கு அமுலுக்குக் கொண்டு வரப்பட்டபின் சுமார் இருபது ஆண்டுகாலம் ஒரு தலைமுறையினர் மதுவின் வாசனையே தெரியாமல் இருந்தனர். தங்களது ஆட்சியில் மதுவிலக்கை ரத்து செய்தன் மூலம் இவர்களுக்கும் மதுவின் ருசி பழகியது. தற்போது மதுவிலக்கு மறுபடியும் அமுலாக்கப்பட்டாலும் ருசி கண்டு விட்டதால் இவர்களால் தங்களது இச்சையை அடக்க முடியாததனால்தான் கள்ளச் சாராயம் தற்போது மலிந்து கிடக்கிறது. ஆகையால் தற்போது கள்ளச் சாராயம் மலிந்து கிடப்பதற்குத் தி. மு. கவும் முக்கிய பங்கேற்க வேண்டும் என்று பரவலாகப் பேசப்படுகிறது. இதற்குத் தாங்கள் அளிக்கும் பதில் என்ன?

கலைஞர்: இது ஒரு தவறான வாதம்! கற்பனைக் குற்றச்சாட்டு! மதுவிலக்கை தி. மு. க. ஆட்சியில் ரத்து செய்யவில்லை. சில காலம் ஒத்தி வைப்பதாகத்தான் அறிவித்தோம். அந்த இடைக்காலத்தில் குடிப்பழக்கத்தைக் கற்றுக் கொண்டவர் தொகை மிகக் குறைவுதான்! ஒத்தி வைக்கப்படுவதற்கு முன்பு — மது விலக்கு நடைமுறையில் இருந்தபோது ஒவ்வொரு ஆண்டும் மதுவிலக்குக் குற்றவாளிகளின் தொகையும், அதன் காரணமாகச் சிறையில் இருந்தோர் தொகையும் இரண்டு லட்சம் பேருக்கு மேலாகவே இருந்தது என்ற கணக்கை மறந்து விடக் கூடாது! தமிழ் நாட்டைச் சுற்றிலும் மதுக்கடைகளை அனுமதித்து விட்டு, தமிழ் நாட்டில் மட்டும் மதுவிலக்கு என்பதும், அதற்குக் கடுமையான சட்டங்கள் என்பதும் — மதுவிலக்குக் கொள்கைக்கு வெற்றியைத் தராது!

பெங்களூர், பாண்டிச்சேரி, ஐதராபாத், திருவனந்தபுரத்தில் திருடினாலும் குற்றம்! சென்னையில் திருடினாலும் குற்றம்! ஆனால் சென்னையில் குடித்தால் குற்றம் — மற்ற அண்டை மாநிலங்களில் குடித்தால் குற்றமில்லை! இந்த அழகில் "ஏக இந்தியா" என்ன வாழ்கிறது?

கேள்வி: தண்டனை கடுமையாக இருந்தால்தான் மக்கள் சட்டத்தை மீறப் பயப்படுவார்கள். அப்படியிருக்க மதுவிலக்குச் சட்டத்தை மீறுபவர்களுக்கான தண்டனையைச் சட்டப்படி கடுமையாக்கினதற்குத் தாங்கள் கண்டனம் தெரிவிப்பது எவ்விதத்தில் சரியானது?

கலைஞர்: கடுமையான தூக்குத் தண்டனைக்கே பயப்படாமல் தானே ஆயிரக்கணக்கில் ஆண்டு தோறும் கொலைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன! அது மட்டுமல்ல, ஆட்சியில் இருப்பவர்கள் கொள்கை வெறியர்களாக இருக்கக் கூடாது! யதார்த்த நிலைகளையும் கவனிக்க வேண்டுமென்று மூதறிஞர் இராஜாஜியே குறிப்பிட்டிருக்கிறார். இராஜாஜியே இந்தியப் பிரதமராக இருந்து இந்தியா முழுவதும் மதுவிலக்கை நடைமுறைக்குக் கொண்டு வந்தாலும் இப்படியொரு கடுமையான சட்டத்தைக் கொண்டுவர மாட்டார் என்பது என் கருத்து.

பேட்டி: நாயகன்



# கல்கி

1979 ஏப்ரல் 8
காளயுக்தி பங்குனி 25
மலர்: 37 இதழ்: 36



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.


# வெட்கம்! வெட்கம்!!

ஜஸ்லோக் மருத்துவ மனையிலிருந்து வரும் செய்திகள் ஜே. பி. உடல் நிலையில் சிறிது சிறிதாக அபிவிருத்தி ஏற்பட்டு வருவதைத் தெரிவிக்கின்றன. அவருக்கு நீண்ட ஆயுளை அளித் துத்தேசத்துக்கு உதவுமாறு இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

இடையில் ஏற்பட்டு விட்ட ஓர் அசம்பாவிதம் —

ஆனைக்கும் அடி சறுக்கும் என்று சொல்லுங்கள் அல்லது கர்வபங்கம் என்று கருதுங்கள். எவ்வாறாயினும் நடந்தது நடந்து விட்டது. ஊரும் நாடும் உலகமும் சிரித்தாகி விட்டது. சிலர் 'நன்றாக வேண்டும்!' என்பது போல் சிரித்தார்கள், சிலர் இரு கரங்களாலும் வாயைப் பொத்திக் கொண்டு, சிரித்தது வெளியே தெரியாமல் சிரித்தார்கள், சிலர் தேசத்துக்கே ஏற்பட்ட அவமானம் குறித்து விசனத்துடன் சிரித்தார்கள்.

''வெந்த புண்ணில் வேலைப் பாய்ச்சாதீர்கள்'' என்கிறார் மொரார்ஜி தேசாய். வேல் பாய்ச்ச நாம் எண்ணவில்லை. அவரது ராஜினாமாவையும் கோரவில்லை. அவருக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய மனவேதனை நமக்குப் புரிகிறது.

ஆனால் ஜே. பி. பற்றி ஒரு தவறான செய்தியை மொரார்ஜி வெளியிட்டார் என்பது மட்டுமல்ல விஷயம். பிரச்னை அதைவிட ஆழமானது. முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது, இந்த நாட்டின் பிரதம மந்திரியை மிக எளிதாக வழி பிசகிப் போகச் செய்து விட முடியும் என்பதுதான். துப்பறியும் பிரிவினர் தவறான செய்திகளைத் தந்து தவறான முடிவுகளை எடுக்குமாறு பிரதமரைச் செய்து விட முடியும் என்பது அளப்பரிய கவலை தரும் அம்சம்.

நாளைக்கே, 'சீனப் போர் விமானங்கள் அசுர குண்டுகளுடன் எல்லை தாண்டி வெகுதூரம் முன்னேறி விட்டன, புதுதில்லி அவற்றின் இலக்கு' என்று துப்பறியும் பிரிவில் உள்ள எவனோ ஓர் அசடு அல்லது போக்கிரி முட்டாள்தனமாகவோ வேண்டுமென்றேயோ ஒரு செய்தியைப் பிரதமருக்குக் கிடைக்கச் செய்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அடுத்த கணம் பிரதமர், நம்து விமானப் படைத் தளபதிக்குச் சீனா மீது எதிர்த் தாக்குதல் நடத்துமாறு உத்தரவிட்டு விடுவாரா? இதே போல் வினாடிப் போதும் தாமதமின்றிப் பிரதமர் முடிவெடுக்க வேண்டிய விஷயங்கள் எவ்வளவோ உண்டு. எனவே பிரதமருக்கு உடனுக்குடன் கிடைக்க வேண்டிய தகவல்களில் தவறே இருக்கக் கூடாது. அதற்கேற்பப் பல்வேறு துப்பறியும் பிரிவுகள் திறம்படவும் நம்பகமாகவும் செயல்பட வேண்டும். ஏதோ ஓர் ஆசாமி மீது குற்றம் சுமத்தி விசாரணை நடத்தி வேலை நீக்கம் செய்வதோடு முடிகிற காரியமில்லை இது. இலாக்காக்கள் அனைத்துமே சுறுசுறுப்பும் விழிப்புணர்வும் பெற வேண்டும். அதற்கு என்ன செய்யப் போகிறார்கள்?

# தலையிலே குட்டு; முதுகிலே தட்டு!

துப்பறியும் இலாக்காக்களில் மட்டுமின்றிப் பொதுவாகவே அரசு இலாக்காக்கள் பலவற்றிலும் மெத்தென்மும் அலட்சியப் போக்கும் இன்று மலிந்து விட்டன. இதற்கு முக்கிய காரணம் ஜனதா அமைச்சர்கள் ஒன்றாக ஒரு மனத்தோடு பேசிச் செயல்படாததுதான்.

உதாரணத்துக்கு ஒரு நிகழ்ச்சி: 'அரசுத்துறை நிறுவனங்கள் சரிவர இயங்கவில்லை. இனியேனும் திருந்தி நல்வழிப்பட வேண்டும்' என்று மொரார்ஜி தேசாய் அண்மையில் ஒரு குட்டு வைத்தார். அரசுத் துறையின் சாதனைகளைத் தாம் குறைத்து மதிப்பிட விரும்பவில்லை என்று கூறிவிட்டு மொரார்ஜி

தொடர்ந்தார்: ''இவ்வாண்டு மார்ச்சு மாதம் முடிய அரசுத் துறைகளில் 15,000 கோடி ரூபாய் முதலீடு ஆகியுள்ளது. இந்நிறுவனங்களில் எவ்வளவு வியாபார நோக்கில் திறம்பட இயங்குகின்றன? 61 நிறுவனங்கள் மொத்தத்தில் 376 கோடி நஷ்டமடைந்துள்ளன. 81 நிறுவனங்கள் 627 கோடி லாபமடைந்துள்ளன. ஆனால் ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் போது வரிகளைக் கழித்த பின், 142 நிறுவனங்களுமாகச் சேர்ந்து 14.36 கோடி நஷ்டமே அடைந்துள்ளன. சில நிறுவனங்கள் சில ஆண்டுகளில் நஷ்டமடைந்தால் பாதகமில்லை. ஆனால் வருஷா வருஷம் நஷ்டம் காண்பிப்பதை எப்படிச் சகிக்க முடியும்? நிர்வாகிகள் பொதுமக்கள் பணத்தைக் கையாள்கிறோம் என்பதை நினைவில் கொண்டு தர்மகர்த்தாக்களாக இருந்து, நிலைமை சீரடையப் பாடுபட வேண்டும்.'' இவ்வாறு கூறிய மொரார்ஜி, அரசுத்துறை நிறுவனங்கள் பலவற்றில் ஏராளமான பணச் செலவில் மது வாங்கியதாகக் கணக்கு எழுதப்பட்டிருப்பதை வன்மையாகக் கண்டித்தார்.

இதே அரசுத் துறை நிறுவனங்கள் மகாநாட்டில் இரு தினங்கள் கழித்துப் பேசிய தொழில் அமைச்சர் ஃபெர்னாண்டஸ், அரசுத் துறை நிறுவனங்களை முதுகில் தட்டிக் கொடுத்துப் பாராட்டியிருக்கிறார்! மொரார்ஜியின் பெயரை இழுக்காமல் ஆனால் அனைவருக்கும் புரியும்படியாக, ''சிலர் குறை கூறிக் கொண்டேதான் இருப்பார்கள், அதுவும் எவ்வளவுக்கு எவ்வளவு அரசுத் துறை சிறப்பாக இயங்குகிறதோ அவ்வளவுக்குத் தாக்குதலும் அதிகரிக்கும். இந்தப் போக்கை எதிர்த்துப்பேச அரசுத்துறை நிறுவனங்கள் கற்றுக் கொள்ள வேண்டும், மன்னிப்புக் கோரவோ, வருத்தப்படவோ கூடாது'' என்றெல்லாம் கற்றுத் தந்திருக்கிறார். ''இந்தத் துறையில் உள்ள குறைகளை நான் குறைத்து மதிப்பிட விரும்பவில்லை, எனினும் அரசுத்துறை, நெஞ்சு நிமிர நிற்கலாம்; அது மேன்மேலும் விரிவடைய வேண்டும்'' என்றெல்லாம் தைரியமும் சொல்லியிருக்கிறார். கடைசியாக, ''தனியார் துறையில் ஊழல்கள் இல்லையா?'' என்ற வழக்கமான பல்லவியையும் பாடியிருக்கிறார்.

ஃபெர்னாண்டஸின் வாதங்களில் உள்ள குறை நிறைகளை இப்போது நாம் அலசி ஆராய வேண்டியதில்லை. அதைத் தற்சமயம் ஒதுக்கிவிடுவோம். இப்படி முரண்பட்ட சொற்பொழிவுகளைப் பிரதமரும் தொழிலமைச்சரும் அடுத்தடுத்து ஒரே மகாநாட்டில் இரண்டே நாள் இடைவெளியில் நிகழ்த்தினால் அரசு அலுவலர்களிடையே எப்படி ஒழுக்கக் கட்டுப்பாடோ, சுறுசுறுப்போ, விழிப்புணர்வோ இருக்கும் என்பதை எண்ணிப் பார்ப்போம்.

பல கட்சிகள் இணைந்ததுதான் ஜனதா. ஆனால் அடிப்படையான ஒரு கொள்கையும் குறைந்த பட்ச செயல் திட்டமும் வகுத்துக் கொண்டு, அதன் பின், அதனை நிறைவேற்ற அனைவரும் ஒருமுகமாகப் பேசவும் செயலாற்றவும் வேண்டுமேயன்றித் தலைக்குத் தலை நாட்டாண்மை, அவரவருக்குத் தோன்றியதைப் பேசுதல் என்றிருந்தால் நிச்சயமாக அரசு அலுவலகங்கள் அனைத்திலும் கட்டுப்பாடு தளர்ந்து மெத்தனமும் திறமையின்மையும் ஊழலுமே மலியும். அமைச்சர் எதையாவது சொல்லி வைப்பது, அப்புறம் இன்னொரு அமைச்சர் ''அது அவரது தனிப்பட்ட அபிப்பிராயம்'' என்று விளக்கம் தருவது என்ற நிலை நீடித்தால், 'எது அமைச்சரின் தனிப்பட்ட கருத்து, எது அரசாங்கக் கொள்கை' என்றே புரியாத குழப்பம் அரசு அதிகாரிகள், அலுவலர்கள் இடையேயும் மக்களிடையேயும் ஏற்படும்.

ஜனதாத் தலைவர்கள் அனைவரிடமும் மக்கள் எழுப்பும் கேள்வி இதுதான்: ''உங்களுக்கு எது முக்கியம்? தனிநபர் பிரபையா? அல்லது தேசநலனா?''

# 'கெரோஸின்!

கெரஸின் வாங்குவதற்கு கடைக்காரரை எல்லோரும் சூழ்ந்து 'கேரோ' செய்வதால் அதை 'கேரோஸின்' என்று அழைத்தால் என்ன? -பட்டாபிராமன்





அவர்: ''முட்டி மோதி ஒரு வழியா.....''

இவர்: ''எண்ணெய் வாங்கிட்டீங்களா?''

அவர்: ''அட நீங்க ஒண்ணு! டின்னைக் கண்டுபிடிச்சி எடுத்துக்கிட்டு வந்துட்டேன்!''

-நா. சஞ்சீவி

மனைவி: திருடப் போறீங்க! கையோட இந்த டின்னையும் எடுத்துக்கிட்டுப் போங்க!

திருடன்: எதுக்குடி?

மனைவி: மண்ணெண்ணெய் கிடைச்சா பிடிச்சுகிட்டு வாங்க!




சஞ்ஜய்யும்ராஜ் நாராயணனும்
சந்திச்சுப் பேசியாச்சு!...
சவானும் சந்திரசேகரும்
சந்திச்சுப் பேசியாச்சு!..
நீங்க ரெண்டு பேரும்
சந்திச்சுப் பேசுறீங்களான்னு தான்
சந்தேகமா இருக்கு!...


யார் சொன்னது? எனக்கும் அவுங்களுக்கும் இடையிலே
எப்பவும் போல நெருங்கிய நட்பு இருக்கத்தான்
செய்யுது!
அர்ஸ்


நிழல் ஏதோ தப்பு
செய்தா, அதுக்கு
நான் எப்படி
பொறுப்பாக
முடியும்?
மாப்பிள்ளை
மருமகன்

# அவரை நினைத்தால்...

## ஸ்ரீவத்ஸன்

அவர்....

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

ஊரிலேயே பெரிய மெத்தை வீடு. குளிர் சாதனப் படுக்கை அறை. அம்பாஸிடர் கார். பாங்கில் பல லட்சம். வயது — நாற்பதைத் தாண்டி விட்டது.

பாவம்.

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

•

கட்டிய மனைவி —

கட்டழகிதான்.

அவர் அவளுடன் ஐந்து வருடங்கள் இன்பமாய் வாழ்ந்தார்.

அவள் அவர் வீட்டை விட்டுப் போய் மூன்று வருடமாகிவிட்டது.

பாவம். அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

•

அவரை நினைத்தால் பரிதாபமாய்த்தான் இருக்கிறது.

அவர் பாவம்.

மனைவி வீட்டை விட்டுப் போனதும் சாப்பாட்டுப் பிரச்னை விசுவ ரூபமாய் உருவம் எடுத்தது. அதைச் சமாளிக்க அவர் பட்ட பாடு.

ஹோட்டல் சாப்பாடு. அதுவும் தவிர வயிற்றில் அல்சர்.

ஆறு மாதம் அவர் பட்ட கஷ்டம்.

அவரைப் பார்த்தால் பரிதாபமாய் இருந்தது.

பாவம்.

•

அவர்....

நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

மனைவி வீட்டை விட்டுப் போன ஆறாவது மாதம் கஷ்டப்பட்டு ஒரு சமையல்காரியைத் தேடிப்பிடித்தார்.

வந்தவள் கைகாரி.

அவருக்கு வயிற்றுப் பசியை மட்டுமல்லாது உடல் பசியையும் தணித்தாள்.

அவளும் அவரை விட்டுப் போய் ஒரு வருடம் ஆகிவிட்டது.

பாவம் — அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

•

அவர்....

நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

மூன்று வருடம் முன்பு மனைவி வீட்டை விட்டுப் போய் விட்டாள்.

சமையல் காரியும் போய் ஒரு வருடமாகி விட்டது.

•

ஆறு மாதம் முன்பு

ஒரே நாளில் இரண்டு வக்கீல் நோட்டீஸ்களைப் பெற்றுக்கொண்டார்.

பாவம்.

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

•

முதல் நோட்டீஸில் கண்டபடி அவர் மனைவி அவரிடம் "விவாக ரத்து" கேட்டிருந்தாள்.

காரணம். "அவர் இல்வாழ்க்கைக்கு லாயக்கற்றவர்."

வக்கீலிடம் ஓடினார்.

பதில் நோட்டீஸ் அனுப்பினார்.

•

இரண்டாவது நோட்டீஸ் — சமையல்காரி அனுப்பியது.

"அவளது ஒரு வயதுக் குழந்தைக்கு அவர் தகப்பனாம்."

வக்கீல் மூலம் பதில் நோட்டீஸ் கொடுத்தார்.

•

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

மனைவி போட்ட விவாகரத்து வழக்கு ஒரு மாவட்ட நீதிமன்றத்திலும் சமையல்காரி போட்ட ஜீவனாம்ச வழக்கு வேறு ஒரு மாவட்டத்திலும் நடந்தது.

இரண்டு வழக்குகளையும் ஒரே மாவட்ட நீதிபதி கோர்ட்டில் நடத்த வேண்டும் என அவர் உயர்நீதி மன்றத்தில் டிரான்ஸ்பர் மனு போட்டார்.

ஆனால் மனு தள்ளுபடி ஆகிவிட்டது.

பாவம்.

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

•

பாவம்.

அவரை நினைத்தால் பரிதாபமாய்த்தான் இருக்கிறது.

இரண்டு கோர்ட்களிலும் வழக்கு நடந்தது.

இரண்டு வழக்குகளிலும் ராஜி செய்துவிட கோர்ட்டார் சொல்லியும் — நடுவில் இருந்த தரகர்கள் — வழக்குகளை நடத்திய வழக்கறிஞர்கள், அவர்களின் சொந்த லாபத்துக்காக — அதற்குச் சம்மதிக்க அவரை விடாதபடி செய்தார்கள்.

பாவம் — அவரை நினைத்தால் பரிதாபமாயிருக்கிறது.




●

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

அவர் இடிவிழுந்தாற்போல் இருந்தார்.

சற்று முன்புதான் அவருடைய வக்கீல்கள் அவரது வழக்கு முடிவை எழுதியிருந்தார்கள்.

விவாகரத்து வழக்கு.

நீதிபதி அவர் ஆண்மையற்றவர் என்பதால் அவர் மனைவிக்கு விவாகரத்து கொடுத்து விட்டார்.

ஜீவனும்ச வழக்கு.

நீதிபதி சமையல்காரியின் குழந்தைக்கு அவர்தான் தகப்பன் என்று தீர்ப்பு வழங்கி விட்டார்.

●

அவர்....

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

ஒரே நபர்தான் அவர்.

ஆனால் ஒரு நீதிமன்றம் அவர் ஆண்மையற்றவர், குடும்ப வாழ்க்கைக்கு லாயக்கற்றவர் என்று விவாகரத்து கொடுத்துத் தீர்ப்பு வழங்கி விட்டது.

இன்னொரு நீதிமன்றம் அந்தச் சமையல்காரியின் குழந்தைக்கு அவர்தான் தகப்பனார் என்று ஜீவனும்சம் கொடுக்க வேண்டும் எனத் தீர்ப்பு வழங்கியது.

அவர் தான் என்ன செய்வார்?

பாவம்.

அவர்....

அவரை நினைத்தால் பரிதாபமாய் இருக்கிறது.

●

# இந்த இதழ் ஓவியர்கள்



## கே. முரளீதரன்

"எனது ஓவியங்களில் இடம் பெறும் உருவங்களைக் கண் பார்வைக்குத் தோன்றும் உருவங்களாக மட்டுமே எடுத்துக் கொள்வது சரியாகாது. அவ்வுருவங்களைக் குறியீடுகளாகக் காண வேண்டும்'' என்று குறிப்பிட்டார் திரு முரளீதரன். Journey to the infinity II என்ற இவரது சித்திரம் இவ்வாண்டு தமிழ் நாடு நுண்கலைக்குழு நடத்திய ஓவியக் கண்காட்சியில் விருதையும், ரூ 1500 பரிசையும் பெற்றுள்ளது.

1976ம் ஆண்டு பெயிண்டிங் துறையில் சென்னை ஓவியக் கல்லூரியில் (Ist class Ist rank) டிப்ளமா பெற்ற 25வயது இளைஞர் தற்போது அங்கேயே பெயிண்டிங் துறையில் உயர்மட்டப் படிப்பு படித்து வருகிறார்.

இந்தியாவின் பல மாநிலங்களில் நடைபெற்ற சித்திரக் கண்காட்சிகளில் இவரது ஓவியங்கள் பங்கேற்றுப் பாராட்டுக்கள் பெற்றுள்ளன. பம்பாய் ஏர் இந்தியாவும் தாமோதர் வேலி கார்ப்பரேஷனும் இவரது ஓவியங்களில் வயித்து வாங்கியுள்ளன.

திரு முரளீதரன் இவ்விதழில் இடம் பெறும் 'அவரை நினைத்தால்' என்ற சிறுகதைக்கு, அவருள் ஏற்படுத்திய பாதிப்புக்களை ஓவியமாகத் தீட்டியுள்ளார்.

## திரு ஆர். பி. பாஸ்கரன்

''இக்கணத்தில் நான் எவ்வாறு இருக்கிறேன். வாழ்க்கையின் அர்த்தபாவங்களை எவ்வாறு புரிந்து கொண்டுள்ளேன். அவை என்னுள் எத்தகைய பாதிப்புக்களை ஏற்படுத்தியுள்ளன ஆகியவற்றைத்தான் எனது ஓவியங்கள் வெளிப்படுத்துகின்றன'' என்று குறிப்பிட்டார் திரு ஆர். பி. பாஸ்கரன்.

இவ்வாண்டு தமிழ்நாடு நுண்கலைக்குழு நடத்திய ஓவியக் கண்காட்சியில் இவரது ஓர் ஓவியம் விருதையும், ரூ 1500 பரிசையும் பெற்றுள்ளது.

சென்னை ஓவியக் கல்லூரியில் பெயிண்டிங் துறையில் உயர்மட்டப் பட்டப் படிப்பை முடித்து முதல் வகுப்பில் தேறிய இவர் ஓவியக் கலையின் பல்வேறு நுணுக்கப் பயிற்சிகளுக்காக இஸ்ரேல், இங்கிலாந்து போன்ற நாடுகளுக்கும், 'Study Travel' திட்டப்படி இத்தாலி, பிரான்ஸ், ஃபிஜி, ஹாலந்து ஆகிய நாடுகளுக்கும் சென்று வந்துள்ளார். மத்திய அரசின் கலாச்சார இலாகா இவ்வாண்டுக்கான 'Fellowship' ஐ வழங்கி இவரைக் கௌரவித்து உள்ளது. இந்த முப்பத்தியேழு வயது ஓவியர் 'இவன் கிழக்கு அவன் மேற்கு' என்ற சிறுகதையைப் படித்த பிறகு அக்கதை ஏற்படுத்திய பாதிப்பை ஓவியமாகத்தீட்டியுள்ளார்.



## திரு டி. ரவி

இருபத்தி நாலு வயதாகும் இந்த இளைஞர் சென்னை சித்திரக் கல்லூரியில் பெயிண்டிங்கில் உயர் மட்டப் பட்டப்படிப்பு படித்து வருகிறார். இவரது ஓவியங்கள் சென்னை, பெங்களூர், கல்கத்தா, டெல்லி ஆகிய நகரங்களில் பல்வேறு கண்காட்சிகளிலும் பங்கேற்றுப் பாராட்டுக்கள் பெற்றுள்ளன.

1977ல் ஒரு தனிநபர் ஓவியக் கண்காட்சியும் நடத்தியுள்ளார்.



பல்வேறு சிறப்புப் பரிசுகளைப் பெற்றுள்ள இவரது ஓவியத்தை டெல்லி லலித கலா அகாடமி வாங்கியுள்ள பெருமையும் இவருக்குண்டு.

'ஃபாரின் மாப்பிள்ளை' என்ற கதைக்கான சித்திரம் ஓவியர் ரவி தீட்டியதுதான்.

## எஸ். கன்னியப்பன்



''பண்டைய மரபுகளுக்கும், நவயுக எதிர்பார்ப்புகளுக்கும், வழிமுறைகளுக்கும் இடையே தொடர்பை ஏற்படுத்த வேண்டும் என்று எனக்கு மிகச் சிறிய வயசிலிருந்தே தாகம் உண்டு. அந்தத் தாகம்தான் ஆரம்ப காலத்தில் எனது உலோகத் தட்டு வேலைப் பாடுகளிலிருந்து தற்போது Ceramic துறையில் நான் செய்துவரும் ஆராய்ச்சி வரை தொடர்ச்சியாக வளர்ந்து பரிணமித்து உள்ளது'' என்று குறிப்பிடும் திரு எஸ். கன்னியப்பன் பல பரிசுகளைப் பெற்றவர்.

சென்னை ஓவியக் கல்லூரியில் பயின்று, உலோக வேலைப்பாடு துறை, சிற்பத்துறை, பெயிண்டிங் தேர்ச்சி பெற்று, அக்கல்லூரியிலேயே ஆசிரியராக இருக்கிறார்.

பித்தளைத் தகடுகளில் கண்ணாடிகளைப் பொருத்தி 'Freedom' என்ற தலைப்பில் இவர் உருவாக்கிய ஓர் உலோகச் சிற்பம் 1970ம் ஆண்டு ஆசிய அகில உலக கண்காட்சியில் பங்கேற்று வெள்ளி மெடலையும் பண முடிப்பையும் பரிசாகப் பெற்றது. இவருக்கு வயது 47.

'சாலை ஓரப் பிள்ளையார்' என்ற சிறு கதைக்கு இவர் வரைந்துள்ள சித்திரம் இவரது திறமைகளை வெளிப்படுத்துவதாக உள்ளது.

பேட்டி: ரங்கா



# நமக்கு ஒரு குலமணி



## சமர்த்த ராமதாஸ் சுவாமிகள்

(சிவாஜியைத் தர்ம சத்ரபதியாகச் செய்தவர் ஸத்குரு ஸ்ரீ ஸமர்த்த ராமதாஸர். 'ஸ்ரீராம ஜயராம ஜயஜயராம' என்ற பதின்மூன்றெழுத்து மந்திரத்தின் சக்தியால் ஹிந்துக்களை ஆத்மீகத்தில் மட்டுமின்றி ஆக்கச் செயலிலும் வீறு கொண்டு பிற மதத்தினரைப் புறம் கொள்ளச் செய்த சரித்திரச் சிற்பி அவர். ஆஞ்ஜநேய ஸ்வாமியின் அவதாரமாக 371 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீராமநவமியன்றே மஹாராஷ்டிரத்தில் தோன்றிய மஹாபுருஷரின் ''மனுசே ச்லோக''த்திலிருந்து இந்த ஸ்ரீராமநவமி இதழில் நாம் சில பாக்களை அளிக்கிறோம்.

**1**

கருநீல முகில்வண்ண, கவினழக, ராமா!
பெருவீர, கம்பீர, முழுதாற்றல் வடிவா!
கருதுகணம் பெரி(து)இடரில் பக்தரவர்பக்கல்
கரம் கொடுக்க வருவோனே! காலை
நினைவேனே.




(பக்கல்—பக்கத்தில், கருதுகணம் - நினைத்த க்ஷணத்திலேயே; காலை — காலைப்பொழுதில்)
(சுலோ 67)

**2**

இராகவன்தன் இருதண்டையொலி
'இராது துயர்' என இயம்பிடுமே புகல்;
கராரவிந்தக் கோதண்டத்தொலி
அடியார்பகை உயிர் குடித்திடும் இடியே;
முடிவினில் குடிஜனம் முழுமையும் தன்னுடன்
விமானமேற்றிவிண் ணோடு தந்(து)
ஆண்டவன்
விடுவானோபணி விடைபுரி அன்பரை?
இராமன் தாஸ அபிமானம் மிக்கவன்.
[சுலோ—29]

(கராரவிந்தம் — தாமரை போன்ற கை; அடியார்பகை — பக்தர்களின் விரோதியர்.)
[கடைசி அடியான ''ராமதாஸ அபிமானி'' என்பதை ராமதாஸர் இரு பொருளில் கூறுகிறார் எனப் புரிகிறதல்லவா?]

**3**

காமதேநுவாம் கல்பவ்ருக்ஷமாம்
சேமமாநிதி செல்வ சிந்தாமணி;
அத்தனைபொருளும் அத்தனைச்சேர்ந்தே
ஸத்தை வாய்க்குது: எத்தனைஎண்ணியும்
உத்தமராமனுக்(கு) உவமை கண்டிலேன்!
[சுலோ—60]

(சேமமாநிதி—க்ஷேமப் பெருநிதி; அத்தன்—அப்பனாகிய ராமன்; ஸத்தை — உண்மைத் தன்மை ).

**4**

வெளியொளிவிளங்கும் வடிவம்இராமம்
துளியும்மாசிலை தூயவிசாலம்.
ஒளிஇதை ஒளி(வு)அற உள்ளத்துணர்வாய்,
ஒழியும் உடல்நசை, ஓயாப் பிறப்பும்.
தெளிவுறும்அந்நிலை தோய்ந்துவிட்டால்
பெறும்
களிப்புதளிர்க்கும், தெவிட்டாதென்றும்!
[சுலோ—197]

(மாசிலை — மாசு இல்லாத; உடல்நசை — உடற்பற்று.)

தமிழ்வடிவம்: ரா. கணபதி

## அத்தியாயம் 2

# அரசத் துரோகம்!

அல்லி விழியின் கணவன் கோவிந்தன் தொண்டையைக் கனைத்துக் கொண்ட பிறகு தான், மல்லியண்ணன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்து, தன் மருமகன் வந்திருப்பதை அறிந்தான். அவனை வரவேற்கக் கூடத் தோன்றாமல் அல்லியை நோக்கி, ''அல்லி, அல்லி யார் வந்திருக்கிறார்கள் பார்'' என்று குரல் கொடுத்தான். பிறகு, ''வாங்க, மருமகப் பிள்ளை, வாங்க வாங்க'' என்று அழைத்தான்.

கோவிந்தனின் விழிகள் சிவந்திருந்தன, இரவு உறக்கமில்லாமல். அல்லி தன் விழிகளில் ததும்பிய நீரைத் துடைத்துக் கொண்டு, தன் கணவனை நோக்கிப் புன்முறுவல் புரிந்தாள்.

''ஏன் விழிகளெல்லாம் சிவந்திருக்கின்றன? இரவு தூக்கமில்லையா?'' என்று கேட்டாள்.

கோவிந்தன், நந்தவனத்து வாயிலை உற்று நோக்கியவாறு, ''தலை முதல் கால் வரை போர்வையைப் போர்த்திக் கொண்டு இப்போது சென்றது யார் மாமா?'' என்று கேட்டான்.

தந்தையும், மகளும் திடுக்கிட்டு ஒருவரையொருவர் பார்த்து விழித்தனர்.

''நம்ப சாம்பவன்தான். குளிர் காய்ச்சல்; வீட்டுக்குப் போகிறான்'' என்றான் மல்லியண்ணன்.

''ஓ! எனக்குக் கூட இன்னும் இரண்டு நாட்களில் காய்ச்சல் வந்து விடும்'' என்று கூறிய கோவிந்தன் தொடர்ந்து, ''இப்படி நான் இரவெல்லாம் கண் விழித்துக்கொண்டிருந்தால் மயக்கம் கூட வந்துவிடும்'' என்று தன் அசதியைப் புலப்படுத்தினான்.

குடிலுக்கு வந்து சென்றவன் தளபதி என்பதைக் கோவிந்தன் கண்டு கொள்ளவில்லை என்பதை அறிந்து கொண்ட தந்தையும், மகளும் ''அப்பாடா!'' என்று பெருமூச்சு விட்டனர்.

அல்லி கணவனருகே வந்து அவன் தோளைப் பற்றியவாறு நின்று கொண்டாள்.

''இவ்வளவு நாட்களாக எங்கே சென்றிருந்தீர்கள்? ஏன் இரவெல்லாம் கண் விழிக்கிறீர்கள்? இங்கே நான் கண் விழித்துக் கண்ணீர் சிந்தி வேதனைப்படுவது போதாதா?'' என்று துயரம் நெஞ்சையடைக்கக் கேட்டாள் அல்லி.

''ஆயிரந்தளி மாளிகையில், நமது சக்கரவர்த்தி நோயுற்றுப் படுத்திருக்கிறாரே உனக்குத் தெரியாதா?'' என்று கோவிந்தன் கேட்டான்.

தெரியாது என்பதற்கு அறிகுறியாக அல்லி தலையசைத்தாள். கோவிந்தன் தன் மாமனை நோக்கி ''மாமா, தங்களுக்கும் தெரியாதா?'' என்று கேட்டான். அவனும் தெரியாது என்று தலையசைக்கவே, ''மாமா! நமது சோழ நாட்டுக்குப் பெரும் ஆபத்து ஒன்று நெருங்குகிறது. நமது மாமன்னர் திடீரென்று மயங்கிக் கீழே விழுந்து விட்டார்!'' என்று கோவிந்தன் கூறினான்.

தந்தையும், மகளும் ஒரே சமயத்தில், ''ஐயோ!'' என்று வாய்விட்டுக் கூவினர்.

''நான் தோறும் மாளிகைக்கு மலர் மாலைகளை அனுப்புகிறேனே, மன்னர் அணிவதில்லையா?'' என்று மல்லியண்ணன் கேட்டான்.

''மன்னர் அணியா விட்டால் என்ன; அந்தப்புர மாதர்கள் அணிகிறார்கள். இல்லாவிடில் அரிசிலாற்றங்கரை மாளிகையில் வந்து கூடியிருக்கும் குறுநில மன்னர்கள் அணிகிறார்கள்'' என்றான்.

இராஜராஜ சோழரைச் சந்திப்பதற்காக, பழையாறைக்குத் திருக்கோவலூரிலிருந்து மலையமானும், சேந்த மங்கலத்திலிருந்து காடவராயரும் வந்திருக்கின்றனர். அதற்கு முன்பே சம்புவரயர் பரிவாரங்களுடன் வந்திருந்தார். அவர்களுக்கு வேண்டிய சுக சௌகரியங்களைக் கவனிக்கவே பணியாட்கள் நியமிக்கப்பட்டனர். சந்தனமும்; பன்னீரும்; வாசமுள்ள மலர்களும், மாளிகைக்கு ஏராளமாகச் சென்றன.

சக்கரவர்த்தி திடீரென்று மயக்கமுற்று வீழ்ந்தவுடன் மாளிகை மருத்துவர் ஒருவரையும் சந்திக்க அனுமதிக்காமல் ஓய்வுடன் அரசர் இருக்க வேண்டும் என்று கட்டளையிட்டதனால் சிற்றரசர்கள் ஆயிரந்தளி மாளிகைக்கு வரமுடியாமல் போய் விட்டது. தளபதி




**விக்கிரமன்**



பெருமான் நம்பிப் பல்லவராயர் அரச ரிடம் ஒருவரையும் நெருங்க விடாமல் பார்த்துக் கொண்டார். அதனால் குறுநில மன்னர்களால் சக்கரவர்த்தியைச் சந்திக்க முடியவில்லை.

கோவிந்தனுக்கு அரசர் படுத்திருக்கும் கூடத்தில் நின்று பணி புரிய வேண்டிய பொறுப்பு அளிக்கப்பட்டது. இரவு பகல் முழுதும் அவன் அங்கேயே இருக்க நேர்ந் தது. கிடைக்கும் ஒய்வு நேரத்தில் அவன் அரிசிலாற்றங்கரையிலுள்ள மாளிகை ஒன் றுக்குச் சென்று அங்குள்ளவர்களிடம் பேசி விட்டுத் திரும்பி வருவான். அந்த மாளிகை பாழடைந்த நிலையில் காணப்பட்டது. ஆனால், கம்பீரமாகத் திகழ்ந்தது. ஒரு காலத்தில் அரச குடும்பத்தார் வசிக்கும் மாளிகையாக விளங் கியது. சோழர் குலத்தின் ஒளிவிளக்காக விளங்கிய அருண்மொழிவர்மர் என்றழைக்கப் பட்ட முதலாம் இராஜராஜரின் வழிவந்த அதிராஜேந்திரனுக்குப் பல மனைவியர். அந்த மனைவியரின் புதல்வர்களுள் ஒருவரான சோமேந்திர சிங்கன் எப்பொழுதும் ஆட்சிக் குத் தொல்லை கொடுத்து வந்தான். அவன் அந்த மாளிகையில் வசித்துவந்தான்.



அவனுக்கு வேண்டிய வசதிகள் அரச குடும்பத்தவரைச் சேர்ந்தவன் என்றமுறையில் செய்து கொடுக்கப் பட்டன. அவனது பரம்பரையில் வந்தவர்கள், சோழ நாடு தங்களுக்கு உரிமை உடையது என்று சொல்லி வந்தனர்.

இப்போது அதே பரம்பரையில் வந்த மல்லப்ப தேவன் மறைமுகமாகத் தனக்கு ஆதரவு தேடிவந்தான். சக்கரவர்த்தி ராஜராஜன் நோய் வாய்ப்பட்டதிலிருந்து அவன் சுறுசுறுப்புடன் இயங்கி வந்தான். சோழ நாட்டின் ஆணைக்குட்பட்ட சிற்றரசர்களைச் சந்தித்துப் பேசி வந்தான். அவர்களுடைய உதவியைப் பெறுவதற்கு ஒவ்வொரு ஊராகச் சென்று வந்தான். பழையாறை மாளிகையில், ராஜராஜனைச் சந்திக்க வருபவர்கள் யார், யார், அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பவையெல்லாம் கேட்டறிய, கோவிந்தனைப் பயன்படுத்தி வந்தான். கோவிந்தன், ஓய்வு கிடைத்த நேரங்களில் அரிசிலாற்றங்கரை மாளிகைக்குச் சென்று, அரசமாளிகையில் நடைபெறுவனவற்றைச் சொல்லி வருவான். அதனால் அவனுக்கு ஓய்வு என்பதே இல்லாமல் போய்விட்டது. நந்தவனக் குடிலுக்குச் சென்று மனைவியைச் சந்திக்கவும் முடியாமல் போய்விட்டது.

இன்று ஓய்வு கிடைத்தது.

அதனால் அல்லியைக் காண ஓடோடி வந்தான்.

''இரவும் பகலும் கண் விழித்து உங்கள் உடலையும் கெடுத்துக் கொண்டு, என் உள்ளத்தையும் வேதனைப்படுத்த அப்படி என்ன முக்கியமான வேலையோ?'' என்று அல்லி அவனைக் கேட்டாள். அதில் மெல்லிய கோபமும் கலந்திருந்தது.

''அல்லி! எனக்கு அதிர்ஷ்டம் அடிக்கப் போகிறது. நிறையப் பொன்னும், பொருளும் கிடைக்கப் போகின்றன. நீ அரசி போல் வாழ வேண்டாமா? இப்போது நான் உண்மையாக நடந்து கொண்டால்தானே பிறகு சுகமாக வாழவழி கிடைக்கும்'' என்றான். அல்லியின் மெல்லிய கரங்களைப் பிடித்துத் தன் கன்னங்களில் வைத்துக் கொண்டான். மெல்ல அவனிடமிருந்து, கொடி நழுவுவது போல் நழுவிய அல்லி, ''நீங்கள் செய்வது அரசத் துரோகக் காரியமல்லவா? என்ன பாபம் செய்தோமோ, முதலில் நமக்குப் பிறந்த ஆண் குழந்தை நோய் ஏதுமில்லாமல் இருந்தும் பிறந்த ஒரே மாதத்தில் இறந்து விட்டது. மறுபடியும் தெரிந்து பாபம் செய்யாதீர்கள். நமக்குச் சந்ததியே இல்லாமல் போய்விடப் போகிறது'' என்று கூறி விம்மினாள் அல்லி.

அல்லியின் விழிநீரைத் துடைக்கத் தோன்றாமல் கோவிந்தன், கோபத்துடன், ''எது அரசத் துரோகம்? உனக்கு அரச விவகாரங்கள் தெரியுமா? இந்தச் சோழநாடு யாருக்குச் சொந்தமென்று நினைக்கிறாய்? இப்போது அரியணையிலிருக்கும் ராஜராஜருக்கா? கிடையவே கிடையாது. மல்லப்ப தேவரே உரிமையானவர். அவர் தக்க



ஆதாரங்களை வைத்திருக்கிறார். அது போகட்டும். குழந்தை இறந்தது நம்முடைய பாவச் செயல்கள் என்கிறாயே, அப்படியென்றால் நமது மன்னர் தாம் பெரும்பாவம் செய்தவர். அதனால்தான் அவருக்கு வாரிசு இல்லை. அவரது பட்டத்து அரசிக்கோ, மற்ற அரசிகளுக்கோ ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. இனியும் பிறக்கும் என்பது என்ன உறுதி? உனது கொள்கைப்படி அவர் மகாபாவம் செய்தவர் இல்லையா? அல்லி, பாவ புண்ணியத்தைப் பற்றிப் பேச வேண்டாம். நமது அரசரே சோழ நாட்டின் நியாயமான வாரிசு அல்லர். அவருக்குப் பிறகு இந்த நாடு மல்லப்பருக்கே சொந்தமாக வேண்டும். அதற்கான முயற்சியில், குறுநில மன்னர்களின் ஆதரவை, உதவியைத் திரட்டுவதில் அவர் ஈடுபட்டிருக்கிறார். நான் அவருக்கு உதவியாக இருக்கிறேன். அவர் தமது முயற்சியில் வெற்றி யடைந்தால் இந்தச் சோழ நாட்டின் மாமன்னர் அவரே. நான் அப்போது...'' என்று பேச்சைப் பாதியில் நிறுத்தி விட்டுக் கம்பீரமாக மார்பை நிமிர்த்தி நின்று அல்லியை நோக்கினான் கோவிந்தன். அல்லி கண்களை மெல்லத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

''நான் அப்போது...'' என்று கூறி நிறுத்திய கோவிந்தன், ''எனக்கென்ன பதவி கிடைக்கும்?'' என்று தன்னையே கேட்டுக் கொண்டான். அவனைப் பார்த்து அல்லி சிரித்து விட்டாள்.

''தங்களுக்குச் சிறைத் தண்டனை கிடைக்கும். அரசாங்கத்துக்கு எதிராகச் சதிசெய்பவருக்கு ஆயுள் தண்டனை என்று சொல்வார்கள்'' என்றாள்.

''ஒருகாலுமில்லை, அல்லி. நீயும் பார்க்கத்தான் போகிறாய். குறுநில மன்னர்கள் இராஜராஜபுரத்து மாளிகையில் கூடியிருக்கிறார்கள். மன்னரைச் சந்தித்து அடுத்து இளவரசுப் பட்டம் சூட்டுவதைக் குறித்துப் பேசப் போகிறார்கள். இன்னும் சில நாட்களிலேயே முடிவாகி விடும். நேற்றே முடிவாகியிருக்க வேண்டும். திடீரென மன்னருக்கு மயக்க மேற்பட்டுவிட்டது'' என்று பேசிக் கொண்டே போன கோவிந்தனது பேச்சின் போக்கை வெளித் திண்ணையில் அமர்ந்து கேட்டுக் கொண்டிருந்த மல்லியண்ணன் மாற்ற விரும்பி உள்ளே நுழைந்து, ''மருமகப்பிள்ளை வெயில் ஏறிக் கொண்டே போகிறது. எழுந்து ஆற்றில் அமிழ்ந்து குளித்து விட்டு வாருங்கள். மணக்க மணக்க முருங்கைக் காய் குழம்பு வைக்கிறேன். பசியாற உண்டு, படுத்துத் தூங்குங்கள்'' என்றான்.

''ஆமாம். ஆமாம். இன்று நான் அரண்மனைக்குப் போகப் போவதில்லை. இங்கேயே தான் நாள் முழுவதும் – இரவுகூட இருக்கப் போகிறேன்'' என்று அல்லியைப் பார்த்துக் கண் சிமிட்டியவாறு கூறினான்.

கணவர் இதுவரை வீட்டுக்கு வரவில்லையே என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்த அல்லி, இது கேட்டுத் திடுக்கிட்டாள். தந்தையின் முகத்தை நோக்கினாள். தனது கங்கை கொண்ட சோழபுரப் பயணம் என்னாவது என்பதை அவள் விழிகள் கேட்டன. தப்பித் தவறிக் கூட அதைப் பற்றிப் பேசி விடாதே என்று மல்லியண்ணன் விழிகள் மகளை எச்சரித்தன.

''மாமா! நான் குளித்து விட்டு வருகிறேன். நான் பேசியவற்றை ஒருவரிடம் கூட மூச்சு விடாதீர்கள். வெளியே தெரிந்தால், திட்டங்கள் சிதைந்து விடும். அந்தக் கழுகுக் கண் பெருமான் நம்பியின் செவியில் விழுந்தால் காரியமே கெட்டு விடும். உம்...'' என்று கடுமையாக எச்சரித்து விட்டு நீராடப் புறப்பட்டான் கோவிந்தன்.

சோழப்படைத் தளபதி பெருமான் நம்பியின் கட்டளைப்படி அன்று மாலையில் கணவன் அறியாது கங்கை கொண்ட சோழபுரத்துக்கு எப்படிப் புறப்படுவது என்று தவியாய்த் தவித்தாள் அல்லி.

## அத்தியாயம் 3

## மறைந்திருக்கும் இரகசியம்

**ப**ழையாறை நகரிலுள்ள ஆயிரத்தளி அரண்மனை கடந்த சில நாட்களைப்போலன்றி, சற்று மகிழ்ச்சியுடன் காணப்பட்டது. ஆயிரத்தளி அரண்மனை பரம்பரைச் சிறப்பு வாய்ந்தது. சோழர் குலத்து அரச குடும்பத்தினர் வசிக்கும் மாளிகையாகவும் அது திகழ்ந்து வந்தது. கங்கை கொண்ட சோழபுரம், இரண்டாம் இராஜராஜனின் தலைநகராக விளங்கினாலும், தமது ஆட்சியின் பெரும் பொழுதைப் பழையாறையிலுள்ள ஆயிரத்தளி மாளிகையிலேயே கழித்தார். அவர் மகிழ்ச்சியுடன் இருந்ததும் அந்த மாளிகையில்தான். இப்போது நோய்வாய்ப்பட்டு உடலும் உள்ளமும் நொந்திருக்க வாழ்வதும் அந்த அரண்மனையில்தான்.

மன்னர் திடீரென்று ஒருநாள் மயக்கமுற்றுக் கீழே விழுந்து விட்டார் என்பதும், நினைவு திரும்பப் பல நாழிகைகள் பிடித்தன என்பதும் அறிந்த பெருமான் நம்பி அரண்மனைக்கு விரைந்தார். சோழர்களின் பரம்பரை மருத்துவர் மன்னரின் உடல்நிலையைச் சோதித்து, சில நாட்களுக்கு ஒருவரும் மன்னரைத் தொந்தரவு செய்யக் கூடாது என்று தடுத்து விட்டார்.

பெருமான் நம்பி உடனே முன் யோசனையுடன் இயங்கினார். வேளக்காரப் படை வீரர்களை அழைத்தார். ஒரு பகுதியினரை ஆயிரத்தளி அரண்மனையிலும், ஒரு பகுதியினரைக் கங்கை கொண்ட சோழபுரத்திலும் கண்ணும் கருத்துமாகக் காவல் காக்குமாறு கட்டளையிட்டார்.

ஆயிரத்தளி அரண்மனையை மிகமிகக் கவனத்துடன் பாதுகாப்பது நியாயமே. மன்னரைக் காக்க வேண்டியது கடமை. கங்கை கொண்ட சோழபுரத்து மாளிகையில் பாதுகாவல் அவசியமா? அப்படி முக்கியமானவர்கள் அங்கு யார் இருக்கிறார்கள்?

யார் இருக்கிறார்கள் என்பதைக் குறித்துப் பெருமான் நம்பி வேளக்காரப் படையினரிடம் கூறவில்லை. அவர் உத்தரவென்றால் உத்தரவுதான். மன்னரைத் தவிர மற்றவர்களின் கட்டளைக்குக் கீழ்ப்படியாத வேளக்காரப் படைவீரர்கள் பெருமான் நம்பியின் உத்தரவுக்கு மறுபேச்சுப் பேச மாட்டார்கள்.

பழையாறை ஆயிரத்தளி மாளிகைக்குள் பெருமான் நம்பி நுழைந்து நேரே மன்னர் படுத்திருக்குமிடத்துக்குச் சென்றார். பெருமான் நம்பியைக் கண்டவுடனேயே இராஜராஜனுக்குப் புதுத் தெம்பு பிறந்து விட்டது. அவர் முகத்தில் புதிய ஒளி பரவுவதை நம்பி உணர்ந்தார்.

பெருமான் நம்பியின் கரங்களைப் பற்றிக் கொண்ட மன்னரின் விழிகள் கலங்கின. நம்பி உடனே ஏதும் பேசவில்லை. அங்கிருந்த பணிப்பெண்களைச் சற்று வெளியேறியிருக்குமாறு கூறினார்.

''நம்பி'' என்று அழைத்தார் இராஜராஜன். அந்தச் சொற்களில் கனிவு இருந்தது. பல காலம் பிரிந்திருந்த ஒருவரைச் சந்திக்கும்போது ஏற்படுவதைப் போன்ற உணர்ச்சி இருந்தது.

''நம்பி, நான் பிழைத்தெழுந்து உன்னைச் சந்திக்க முடியும் என்று நினைக்கவே இல்லை. ஐராவதேச்வரரைத் தரிசனம் செய்து விட்டு வந்து உட்கார்ந்தேன். நெஞ்சை வலித்தது. உடலெல்லாம் படபடத்தது. உடல் முழுவதும் வியர்த்தது. கண்கள் இருண்டன. ஐராவதேச்வரர் ஆலயத்து மேல் மாடத்துக்குச் செல்வது போல் தோன்றியது. சோழர் குலம் விளங்க வைத்த என் பாட்டனுக்குப் பாட்டன் இராஜராஜ சோழதேவர் அங்கே நின்று கொண்டு என்னைக் கனிவுடன் அழைப்பது போல் தோன்றியது. ஆகா! அவருடைய எழிலுடைத் திருமேனியின் வடிவழகை என்னவென்று கூறி வர்ணிப்பேன். பொன்னார்மேனியுடைய அவரது நீண்ட கரங்களையும், பரந்த மார்பினையும் நான் கண்டு அதிசயிக்கிறேன். அவருடைய திருநாமத்தை எனக்கு எதற்காகச் சூட்டினார்கள் என்று ஒருகணம் எனக்கே வெட்கமாகி விட்டது. அவர் கம்பீரம் என்ன, அவரது வடிவழகு என்ன; பெரிய விமானம், பெரிய நந்தி, பெரிய நடராசர் சிலை என்று எல்லாவற்றையும் மிகப் பெரிதாகப் படைத்த அவரது ஆற்றல் என்ன, அவர் சோழநாட்டுக்கு ஆற்றிய பணிகள், செய்த நன்மைகள் இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்தேன். அந்த மாபெரும் மன்னருக்குப் பொருந்திய இராஜராஜர் என்கிற பெயர் எனக்கு எள்ளளவும் பொருந்தாது என்று தோன்றி விட்டது. ... நம்பி...'' இராஜராஜன் பேச முடியாமல் திணறினார்.

''அரசே!'' என்று பெருமான் நம்பி பரபரப்புடன் அவர் அருகே சென்று அவர் மார்பைத் தடவிக் கொடுத்து அவர் நெற்றியில் துளித்த வியர்வையைத் தனது மேலங்கியில் ஒத்தி யெடுத்து, ''தாங்கள் இவ்வாறு உணர்ச்சி வசப்படலாமா? தங்களைத் தாங்களே குறை கூறிக் கொள்ளலாமா? தங்களுக்கு எந்தவித நோயுமில்லை. தங்கள் உள்ளத்தில் வெளியிட முடியாது அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் ஏதோ ஒன்று தங்களை அதிர்ச்சிக் குள்ளாக்கி விட்டது. அரசர்க்கரசே! இளம்பிராயம் முதல் தங்களிடம் நெருங்கிப் பழகிய என்னிடம் கூடச் சொல்லாமல் இதயப் பேழையில் தாங்கள் பாதுகாத்து வரும் இரகசியத்தை நான் அறியலாமா?'' என்று பெருமான் நம்பி அரசருக்கு மட்டும் கேட்கும் குரலில் கேட்டார்.

இராஜராஜன், நம்பியின் கரங்களை அழுத்தமாகப் பற்றிக் கொண்டார்.

''நம்பி! என்னை விட்டு நீ எங்கும் சென்று விடாதே. சொல்ல முடியாத பய உணர்ச்சி என்னுள்ளே குமுறி என்னை வாட்டுகிறது. இந்தச்சோழ நாட்டுக்குப் பெருந்துன்பம் ஏதோ நேரப் போகிறது என்று என் உள்ளுணர்வு கூறுகிறது...'' என்று பேசமுடியாமல் பேசினார் அரசர்.

நம்பி தன் மடியிலிருந்த பையிலிருந்து திருநீற்றை எடுத்து இராஜராஜரது நெற்றியில் இட்டு அவர் மார்பிலே தடவி, ''அரசே! தில்லையில் ஆனந்த நடனமிடும் பாதனின் பிரசாதம் இது. தங்கள் நலமும், நாட்டின் நலமும் மிக வேண்டி நடராசப் பெருமானிட



ஒரு நிருபர் ஒரு நடிகையைப் பேட்டி கண்டார்.

நிருபர்: கோடைக்கு ஊட்டி போனீர்களே! ஏன் திரும்பிவிட்டீர்கள்?

நடிகை: ஊட்டியில் என் பங்களாவில் ஏர் கண்டிஷன் ரிப்பேர். திரும்பிவிட்டேன்.

எஸ். மகாதேவன்



ஒருவர்: மருந்தெல்லாம் கொடுத்துக்கூடப் பிரயோசனம் இல்லை. கடைசியில் அவர் இறந்து விட்டார்.

நண்பர்: எப்போது?

ஒருவர்: மருந்து பாட்டிலில் Expiry date போட்டிருந்ததே அன்னிக்குத்தான்.

எல். சந்திரசேகர்

---

மிருந்து பெற்றுவந்த திருநீறு. மந்திரமாகும் இந்த நீறு தங்கள் மனக் கவலையைப் போக்கி விடும். சில நாட்களாகச் சோழ நாட்டில் ஆங்காங்கே சிலர் பேசிக்கொள்வதை நானும் அறிந்தேன். தங்களுக்குப் பிறகு இந்த நாட்டுக்கு யார் வாரிசு என்ற கேள்வியை எழுப்பி அவர்களே மறுமொழியையும் கூறிக் கொள்கிறார்கள்'' என்று உள்ளம் நெகிழச் சற்று மெல்லிய குரலில் பேசிய நம்பி, திடீரென்று ''அவர்கள் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்? உங்களுடைய இறுதிநாளை அவர்களே உறுதிப்படுத்திக் கொண்டு விட்டார்களா?''என்று உரத்த குரலில் கேட்டார்.

மூன்றாம் பிறைச் சந்திரனைப் போல் புன்னகையின் கீற்று இராஜராஜனின் முகத்தில் தோன்றியது.

''அவர்கள் பேசுவதில் நியாயம் இருக்கிறது'' என்றார் மன்னர்.

''எது நியாயம்? அவர்கள் உங்களுடைய இறுதிநாளை எதிர்பார்ப்பதுதான் நியாயமா? உங்களால் இந்த நாட்டு மக்களுக்குக் கடுகளவாவது துன்பம் ஏற்பட்டிருக்கிறதா? 'தந்தையிலோர்க்குத் தந்தையாகியும், தாயிலோர்க்குத் தாயாகியும், மைந்தரில்லோர்க்கு மைந்தராகியும், மன்னுயிர்கட்குயிராகியும் விளங்கும் தங்களைக் கண்டு மனம் வெறுப்பவர்களும் இருக்கின்றார்களா?''

இராஜராஜன் இப்போது கலகலவென்று சிரித்தார்.

''அவர்கள் என் இறுதி நாளை எதிர்பார்க்கின்றார்கள் என்று சொல்ல மாட்டேன். எனக்குப் பிறகு நான் யாருக்கு இளவரசுப் பட்டம் கட்டப் போகிறேன் என்று எதிர்பார்ப்பது நியாயந்தான். அந்த எதிர்பார்ப்பின் பலனை, தாங்களே அடைய நினைப்பவர்கள் கூடித் திட்டம் வகுப்பதும் இயற்கை தானே'' என்று கூறியவர், ''நம்பி, இப்போது நீ கூறினாயே, 'மைந்தரில்லோர்க்கு மைந்தராகி...' என்று—எனக்கு மைந்தரில்லை, எனக்கு நானே மைந்தனாக முடியுமா? என் விஷயத்தில் அது பொய்த்து விட்டது என்று தான் அனைவரும் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். நம்பி, உனக்குத் தெரியாமலிருக்க முடியாது. எனக்கு வாரிசு இல்லை என்று பலர் நினைக்கிறார்கள். என் குழந்தைகளைக் குறித்து நான் பெருமைப்படாமல் அதை ஓர் இரகசியமாகவே இதுவரை காப்பாற்றி வந்திருக்கிறேன்'' என்று கூறும்போது, பெருமான் நம்பி, குறுக்கிட்டு, ''அரசே, நான் அறிவேன்...''என்றுமட்டும் கூறி நிறுத்தினார்.

இராஜராஜன் திடுக்கிட்டுத் திகைத்தார்: ''நம்பி, உனக்குத் தெரியுமா? தெரிந்தும் அதைப் புலப்படுத்திக் கொள்ளவில்லையே? உன்னுடைய இடத்தில் மற்றொருவர் படைத்தளபதியாக இருந்தால் என்னைப் பற்றி நினைப்பதே வேறாக இருந்திருக்கும். நீ சேனாதிபதி என்ற உயர் அதிகாரி என்பது இருக்கட்டும். நீயும் நானும் சம வயதுடையவர்கள். கங்கை கொண்ட சோழபுரத்தில் ஒன்றாகவே கல்வி கற்றோம். உன்னைவிட எனக்குக் கல்வியில் அதிக நாட்டம் சென்றது இல்லையா?'' என்று கூறியபோது இருவரும் மெல்ல நகைத்தனர்.

''இராச பண்டிதன் என்று என்னை உடன் படித்த மாணவர்கள் புகழ்ந்தார்கள். நான் அரசனானேன். நீ அதற்குள் புஜ பலமிக்க பெருவீரனாக விளங்கினாய். சேரநாட்டின் மீது படையெடுத்துச் சென்று வெற்றிபெற்று வந்தாய்... உன்னைப் படைத் தலைவனாக்கினேன்...'' என்று கூறிச் சற்று நிறுத்தி இளைப்பாறினார்.

மன்னரை மேலும் பேச விடாமல், ''அரசர்க்கரசே! நீங்களும் நானும் பிள்ளைப் பிராயத்தில் பழகிய இன்ப நினைவுகளைப் பல நாட்களுக்குப் பேசிக் கொண்டிருக்கலாம். என்னைப் படைத் தலைவனாக்கினீர்கள். பல்லவரையர் என்ற பட்டம் கொடுத்துச் சிறப்பித்தீர்கள். என் வாழ்நாளில் நான் பெற்ற பெரும் பேறு அது. அவ்வாறெல்லாம் கௌரவித்த தாங்கள் தங்களுக்குக் குழந்தைகள் பிறந்ததை என்னிடம் தெரிவிக்கவில்லை என்பதை நான் தவறாகக் கருதவில்லை. அதற்கு ஏதோ ஒரு காரணமிருக்கிறது என்று முடிவு செய்து கொண்டேன்'' என்றார்.

''ஆம், பெருமான் நம்பிப் பல்லவரையரே! அதற்குக் காரணம் இருக்கிறதென்பது உண்மைதான். அதை உன்னிடம் இதுவரையில் சொல்லாது மறைத்து வைத்திருந்தேன். தக்க சமயத்தில் சொல்ல எண்ணினேன். அதற்கான சமயம் இப்போது வந்து விட்டது'' என்றார் இராஜராஜன்.

மன்னர் கூறப் போகும் அந்தச் சம்பவத்தைக் கேட்க நிமிர்ந்து உட்கார்ந்தார் சோழ நாட்டுப் படைத் தலைவர், பெருமான் நம்பிப் பல்லவரையர். (தொடரும்)

மேல் நாட்டு மருத்துவ நிலையங்களுக்கு ஈடான வகையில் ஒரு கண் மருத்துவ மனையை உருவாக்கிக் கூடியவரை குறைந்த செலவில் சிகிச்சை அளிக்க வேண்டும் என்கிற எண்ணத்துடன் தொடங்கப்பட்டது சங்கர நேத்ராலயா. சென்ற ஆண்டு விஜயா மருத்துவ மனையில் ஆரம்பமான இந்தப் பணி தற்போது நுங்கம்பாக்கத்தில் சொந்தக் கட்டிடத்துக்கு இடம் பெயர்ந்துள்ளது. முதலமைச்சர் எம். ஜி. ஆர். ஆரம்பித்து வைத்தார். ''மருத்துவ மனைக்கு லாப நோக்குச் சிறிதேனும் கிடையாது'' என்று டாக்டர் பத்ரிநாத் குறிப்பிட்டார். தொடர்ந்து அவர் கூறுகிறார்:



டாக்டர் பத்ரிநாத்

''இக்கட்டடத்தைச் சுற்றியுள்ள 31 கிரவுண்ட் நிலத்தை நாங்கள் வாங்கும்போது 13 கிரவுண்டை நன்கொடையாகவே அளித்த மனேக்ஜி தம்பதிக்கு என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம். இக்கட்டிடத்தில் மருத்துவ மனை விஸ்தரிப்பு முடிவடையும் போது நான்கு ஆபரேஷன் தியேட்டர்களும், 100லிருந்து 110 கட்டில்களும் இருக்கும். சுமார் 1.35 கோடி ரூபாய் செலவாகியிருக்கும். இந்தியாவிலேயே மிகச் சிறந்ததாகவும், ஆசியாவின் சிறப்பான கண் மருத்துவ மனைகளில் ஒன்றாகவும் திகழும்.

''நன்கொடைகள் மூலம் இதுவரை சுமார் 30 லட்ச ரூபாயும், ஆந்திர வங்கியில் குறைந்த வட்டியில் ரூ 25 லட்சம் கடனாகவும் பெற்றுள்ளோம். பாக்கியுள்ள 80 லட்ச ரூபாயை நன் கொடையாக வசூலிக்க வேண்டும் என்பது எங்களுடைய விருப்பம்.

''பலவிதமான அறுவைச் சிகிச்சைகள் இங்கு நடக்கும் என்பதோடு கண் சிகிச்சைக்குத் தேவைப்படும் சில அதிநூதனமான கருவிகளும் இங்கு தருவிக்கப்பட இருக்கின்றன. அவற்றுள் ஒன்று ஜப்பானைத் தவிர ஆசியாவிலேயே இங்குதான் முதன் முதலாக நிறுவப்பட இருக்கிறது. இக்கருவிகள் மொத்தம் 25 லட்சம் பெறுமானமுள்ளவை.



ஸ்ரீ வி. டி. சாமி

'' 'சங்கர நேத்ராலயா' விரைவில் முழுமை பெறும்போது சில கண் கோளாறுகளுக்காக மேல் நாடுகளுக்குச் சென்று

# சங்கர நேத்ராலயா

தான் சிகிச்சை பெற வேண்டும் என்கிற நிலை மாறிப் பல அண்டைய நாடுகளிலிருந்து வரும் தீவிர கண் நோயாளிகளுக்கு நம்மால் சிகிச்சை அளிக்க முடியப் போகிறது.

''போதுமான அளவுக்கு எங்களுக்குப் பணம் நன்கொடையாக வருமானால் அதற்குத் தக்கவாறு சிகிச்சை கட்டணங்களை நிச்சயம் குறைத்து விடுவோம். மொத்தத்தில் வரும் புற நோயாளிகளில் 40 சதவிகிதத்தினருக்கும் அனுமதி பெற்றுத் தங்கிச் சிகிச்சை பெறும் நோயாளிகளில் 10 சதவிகிதத்தினருக்கும் இலவசமாக சிகிச்சை அளிப்போம் என்று மத்திய அரசுக்கு நாங்கள் ஏற்கெனவே ஒப்புதல் அளித்துள்ளோம். மாதம் ரூ 300க்கும் குறைவாக ஊதியம் பெறுவோர்க்கு இவ்விலவசச் சிகிச்சை அளிக்கப்படும்.''

திரு வி. டி. சுவாமி கூறுகிறார்: ''மேனாட்டிலேயே தங்கிப் பல சிறப்புக்கள் பெற்றுப் புகழ் பெற வாய்ப்புகள் இருந்தும் அவற்றை உதறித் தள்ளி நம் நாட்டு மக்களுக்கு உதவ வேண்டும் என்கிற ஆர்வத்தில் செயல்படும் டாக்டர் பத்ரிநாத் போன்ற இளைஞர்களின் லட்சியக் கனவுகளை நினைவாக்க நாம் ஊக்குவித்து உதவத் தவறினால் நம் நாட்டில் எப்படி ஓர் ஆரோக்கியமான சமுதாயத்தை நம்மால் உருவாக்க முடியும்?... பலரும் இப்புனிதப் பணியில் பங்கு பெற முன் வருவார்கள் என்று நம்புகிறேன்!''

தாமே ஒரு லட்ச ரூபாய் நன்கொடையை சங்கர நேத்ராலயாவுக்கு அளித்துள்ள திரு வி. டி. சுவாமி இந்நிறுவனத்தின் கௌரவ காரியதரிசியும் பொருளாளரும் ஆவார்.

விடைபெறுமுன் டாக்டர் பத்ரிநாத் இன்னொன்றையும் குறிப்பிட்டார்:

''கண் பார்வையற்றோர்க்குப் பார்வை அளிக்கும் பணிக்கு விழிதானம் அத்தியாவசியம். இலங்கையில் இதில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. இறந்தவர்களின் விழிகளைத் தானம் அளிக்க முன்வருவோருக்காக இந்தக் கேந்திரத்தில் ஒரு விழி வங்கியும் செயல்படுகிறது. கண்நோய் பற்றியும் நோய் வருமுன் காக்கும் முறைகள் பற்றியும் ஆராய்ச்சிகளும் இங்கு நடக்கும். கண் பார்வையற்றோர்க்குப் பள்ளி அமைக்கவும் இருக்கிறோம்.''

காஞ்சிப் பெரியவருக்கு காடராக்டுக்காக சஸ்திர சிகிச்சை செய்தவர் டாக்டர் பத்ரிநாத். அப்போது நர்ஸாகப் பணி புரிந்தவர் டாக்டரின் மனைவி. பெரியவாளின் பூரண ஆசிகளுடன் ஆரம்பமாகியுள்ள இந்த நற்பணிக் கேந்திரம் சங்கர நேத்ராலயா என்று பெயர் பெற்றதிலும் துரிதமான முன்னேற்றம் அடைந்து வருவதிலும் வியப்பில்லை.

பி. ரங்கநாயகி

# சுந்தரமான நண்பர்

கே. சாரங்கபாணி



எஸ். டி. சுந்தரம்

தம் வாழ்நாள் முழுதும் யாருக்கும் ஒரு சிறு தீங்கும் நினையாதவர்; காந்தியையும் பாரதியையும் சதா நினைத்தவர். தமது தேவைகளைக் கூட எண்ணாமல் பிறருக்கு உதவியவர். நாடகம் முடிந்து கணக்குப் பார்க்கும்போது ரூ. 500 ரூ. 600 தம் கையில் இருந்து சுடு கட்டி எல்லோருக்கும் குறைவின்றிக் கொடுப்பார். பெயரால் மட்டுமின்றி மனத்தாலும் சுந்தரமானவர்.

பல தமிழ்ச் சினிமாப் படங்களுக்கு உரையாடலையும், பாடல்களையும் இயற்றியிருப்பதுடன் தெலுங்கு, ஹிந்தி முதலிய படங்களுக்கு மொழிமாற்றம் செய்யும் பணியையும் நிறைவேற்றியிருக்கிறார். கள்வனின் காதலியைப் படம் எடுக்க அனுமதி கேட்ட சமயம் கல்கி அவர்கள், ''பேஷா அனுமதி தருகிறேன். ஆனால் ஒரு கண்டிஷன். இதற்கு உரையாடல் எஸ். டி. சுந்தரம் தான் எழுத வேண்டும்!'' என்றார்.

1942ல் வெள்ளையனேவெளியேறு போராட்டத்தில் கலந்து கொண்டு தஞ்சைச் சிறையில் தவமிருந்த காலத்தில்தான் எஸ். டி. எஸ். ஸின் கவியின் கனவு என்ற அற்புத நாடகம் சிருஷ்டியானது. 1942 முதல் 45 வரையில் நமது மாபெரும் அருமைத் தலைவர்கள் ஆமத் நகர்க் கோட்டையில் இருந்தார்கள்.

இந்தச் சமயந்தான் எஸ். டி. சுந்தரம், சக்தி கிருஷ்ணசாமி, ஓவியர் மாதவன் பிள்ளை இவர்களால் அமைக்கப்பட்ட சக்தி நாடக சபையாரால் நடத்தப்பட்டது கவியின் கனவு. இந்த நாடகம் நாகப்பட்டினத்தில் மாதக் கணக்கில் நடத்தப்பட்டது. ராஜ குருவாகச் சகோதரர் எம். என். நம்பியார் அவர்களும் கவியாக சகோதரர் எஸ். வி. சுப்பையா அவர்களும், அவர்களைத் தொடர்ந்து நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்களும், கே. வி. சீனிவாசன் அவர்களும் நடித்தார்கள். இந்த நாடகத்துக்கென்றே கவியின் கனவு ஸ்பெஷல் என்று தனி ரயிலும், கப்பலும் விடப்பட்டன.

1945–க்குப் பிறகு தமிழ் நாடக வரலாற்றில் பல புரட்சிகரமான நாடகங்கள் வருவதற்கு முன்னோடியாக இருந்தது. எஸ். டி. சுந்தரம் அவர்களின் 'கவியின் கனவு' என்று தைரியமாகச் சொல்லலாம்.

ராக ஆலாபனைகளின்போது மேலே மேலே சென்று சஞ்சாரம்பண்ண வசதியான சாரீரம், சம்பிரதாயத்திலிருந்து வழுவாத சங்கீதம், இயல்பானதொரு அடக்கம், சுருதி சுத்தம், லயஞானம் எல்லாம் குறையின்றி அமையப் பெற்றவர் திருமதி மணி கிருஷ்ணசாமி.

இளைய தலைமுறை பெண் வித்வான்களில் முன்னணி ஸ்தானத்தில் இருக்கும் மணி, வட அமெரிக்க கர்னாடக சங்கீத அகாடமியின் (North Amercian Carnatic Music Academy) அழைப்பை ஏற்றுக் கொண்டு இம் மாதம் 16ம் தேதி கிளம்பிச் சென்று நியூயார்க், லாஸ் ஏஞ்சலஸ் போன்ற பல அமெரிக்க நகரங்களிலும், கனடா நாட்டில் சில நகரங்களிலும் இருபத்தைந்துக்கும் மேலான கச்சேரிகளை நிகழ்த்தவிருக்கிறார். இரண்டரை மாத காலம் நீடிக்கும் இப்பயணம்தான் இவரது முதல் மேனாட்டு அனுபவம்.

திருமதி மணி கிருஷ்ணஸ்வாமிக்கு வந்துள்ள சிறப்புக்கள் திடீரெனக் கிடைத்தவையல்ல. இளவயதில் கலாக்ஷேத்திராவில் பெற்ற பயிற்சி, திரு டைகர் வரதாச்சாரியார், பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், மைசூர் வாசுதேவாச்சார்யா, திரு டி. கே. ஜெயராம ஐயர், முசிரி திரு சுப்பிரமணிய ஐயர் போன்ற ஐந்து மாபெரும் வித்வான்களிடம் பெற்ற சிட்சை, கடினமான உழைப்பு சமஸ்கிருதம், ஹிந்தி, தெலுங்கு, தமிழ்



திருமதி மணி கிருஷ்ணசுவாமி

# அமெரிக்கா செல்லும் மணியான சங்கீதம்

போன்று பல மொழிகளில் தேர்ச்சி, ஆழ்ந்த இறையுணர்வு, பாடும் பாடல்களின் அர்த்தத்தை உணர்ந்து கொண்டு பாடும் வழிமுறை, உயர்ந்த அலுவலகப் பதவி வகித்தும் மனைவியின் திறமையை உணர்ந்து கொண்டு அதனைச் சிறப்படையச் செய்யப் பாடுபடும் கணவரின் பரந்த மனநோக்கு போன்ற எல்லாம் கூடிதான் திருமதி மணி கிருஷ்ணஸ்வாமி அவர்களை இந்நிலைக்கு உயர்த்தியுள்ளன.

தமது பன்னிரண்டாவது வயதில் கச்சேரி செய்ய ஆரம்பித்த இவர் பெற்றுள்ள புகழும், பட்டங்களும் எத்தனையோ!

ஸ்ரீ வேதாந்த தேசிகரின் கோதா ஸ்துதியையும், தயாசதகத்தையும் இசையில் வடித்து எல். பி. ரெகார்டுகளாக வெளியிட்டது ஹிந்து மதத்திற்கும் கர்நாடக சங்கீதத்திற்கும் இவர் செய்த முக்கிய தொண்டுகளாகும்.

அமெரிக்காவுக்குப் பயணமாகும் திருமதி மணி கிருஷ்ணசுவாமியையும், அவருக்குப் பக்க வாத்தியம் வாசிக்க உடன் செல்லும் குமாரி கன்னியாகுமரி (வயலின்), மன்னார்குடி திரு ஈசுவரன் (மிருதங்கம்) ஆகியோரையும் கல்கி வாசகர்கள் சார்பிலும் கர்நாடக இசை உலகின் சார்பிலும் வாழ்த்துகிறோம்.

ஏ. கன்யாகுமரி



மன்னார்குடி ஈசுவரன்



# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

ஜெயகாந்தன்

## 2. எப்படி நல்வழிப் படுத்துவது?

விஷயம் ரொம்பவும் முற்றிப் போய் விட்டது என்று மற்றவர்களும் தெரிந்து கொள்ளுகிற வரை சிங்காரத்தைப் பற்றித் தம் வாய் யாரிடமும் ஏதும் உளறி விடக்கூடாதே என்று விளக்குச் சாமியார் தம்மை மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டிருந்தார். அவருக்குச் சாப்பிடுகிற விஷயத்தில் வாயைக் கட்டி வைத்திருக்கிற மாதிரி பேசுகிற விஷயத்தில் கட்டுப்படுத்திக் கொள்ளும் தவ வலிமை ரொம்பக் குறைவு. மண்டை வெடித்து விடும். அது மாதிரி சமயங்களில், வண்டியில் வருகிற போது, பெரிய சாமியிடம் காதோடு சொல்லி வைத்தாரே, அதுபோல் அந்தரங்கமானவர்களின் காதில் ரகசியமாகவேனும் சொல்லி விட வேண்டும். அப்படி சிங்காரத்தைப் பற்றியும், அவன் அக்கறையில் நடத்தும் சல்லாபங்களைப் பற்றியும் கோதையின் காதிலும் போட்டு வைத்தார் சாமியார்.

இந்தக் குடும்பத்தில் நடக்கின்ற ஒவ்வொன்றும் கோதைக்கு இடிவிழுகிறாற் போலிருந்தது. ஏற்கெனவே மருதேசன் பிள்ளையின் மூத்த புத்திரனைப் பற்றி ஊரெல்லாம் 'தாசித் தெருவாசி' என்று பேராகி விட்டது. இப்போது இந்தச் சிங்காரம் பயலுக்கும் கெட்ட பேராகிறதே என்பதில் இறந்துபோன புருஷனின் சார்பில் அவளது வருத்தம் இரட்டிப்பாகியது...

சிங்காரத்திடம் தானேதும் நேரிடையாகக் கேட்டுத் தன் மரியாதையைக் குறைத்துக் கொள்ள வேண்டாம் என்று நினைத்தாள் கோதை. பெரியசாமிக்கு நேர்ந்த அவமரியாதைக்குப் பிறகு எல்லோருமே சிங்காரத்திடம் சற்றுப் பயத்துடன் நடந்து கொண்டார்கள்.

சிங்காரத்தைப் பள்ளிக் கூடத்திலிருந்து பேர் நீக்கம் செய்து அனுப்பி விட்டார்கள் என்ற சேதியைப் பெரியசாமி விளக்குச் சாமியார் மூலம் கோதைக்குச் சொல்லி அனுப்பினான். கோதை அப்போது முதல் சிங்காரத்தை 'இனியும் இவன் குழந்தை. அல்ல' என்று நிர்மானித்தவளாய், அவனிடமிருந்து சற்று விலகி நின்று கொண்டாள். முன்புபோல் அவனைப் பொறுப்போடு பாதுகாத்து, 'சாப்பிட்டானா? தூங்கினானா?' என்று கவலை கொள்ளாமல் இந்த வீட்டில் திரிகிற எத்தனையோ மனிதர்களில் ஒருவனாய் அவனையும் நடத்தினாள் அவள். ஆரம்பத்தில் சின்னம்மாவின் இந்த ஒதுக்கத்தைச் சிங்காரம் கவனிக்கவே



இல்லை. அவனுக்கு அது செளகரியமாகக் கூட இருந்தது...

சிங்காரம் நாள் முழுவதும் அக்கரையில் தனது நண்பர்களுடன் திரிந்தான். இந்த நேரத்தில்தான் வீட்டிலிருந்து கிளம்புவது, இந்த நேரத்தில்தான் திரும்புவது என்று நியமங்களில்லாமல் கேட்பாரற்று அவன் திரிந்தான். அவனது அக்கரை நண்பர்கள் சிங்காரத்தைத் தேடிக் கொண்டு வந்து தென்னந்தோப்பிலும் வீட்டின் முன்புற திண்ணையிலும் இவனுக்காகக் காத்துக் கிடந்தனர்.

கோதை இவை எல்லாவற்றையும் நேரிடையாகவும் சாமியார் மூலமாகவும் அறிந்து கொண்டு, சிங்காரத்தை இடையறாது கண்காணித்தாளே தவிர, தானே எதையும் கண்டு கொண்டதாக அவனிடம் காட்டிக் கொள்ளவில்லை.

சிங்காரம் இப்போது நிறையப் பணம் செலவழித்தான். அதைப் பற்றியும் கோதை அவனிடம் கேட்கவில்லை. ஒருநாள் அவன் கழுத்திலிருந்த தங்கச் சங்கிலியையும் காணவில்லை. கோதை அது குறித்தும் அவனிடம் விசாரிக்கவில்லை. ஆனால் சிங்காரம் பணத்தையெல்லாம் செம்படவக் குப்பத்தைச் சேர்ந்த எந்தெந்தப் பையன்களோடு கும்மாளமிட்டுச் செலவு செய்கிறான் என்பது – ஏன்? அந்தச் சங்கிலி இப்போது வெள்ளையம்மாளின் மகன் ரஞ்சிதத்தின் கழுத்தில் கிடப்பது வரை-எல்லாவற்றையும் துல்லியமாய் அறிந்து வைத்திருந்தாள் கோதை.

ஏதோ ஒரு கிறுக்குக் கிழவன் மாதிரி விளக்குச் சாமியார் பொழுது போகாத நேரங்களில் இப்போதெல்லாம் அக்கரையில் திரிந்து கொண்டிருந்தார்.

அக்கரை மைனர்ப் பயல்கள், நிழல் கவிந்த மணல் மேடுகளில் கயிற்றுக் கட்டில் போட்டுக் கொண்டு சீட்டுக் கச்சேரி நடத்தும் இடங்களில் சிங்காரம் ஒரு ஜமீன்தார் தோரணையில் கால்மேல் கால்போட்டு அவர்கள் மத்தியில் தனியாசனத்தில் கம்பீரமாய் வீற்றிருப்பதைப் பார்த்து, அப்படியே மருடேசன் பிள்ளை உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றும் சாமியாருக்கு...

சிங்காரம் சீட்டு விளையாடி அவர் பார்த்ததே இல்லை; விளையாடுகிறவர்களுக்கு அவன் பணம் தருவானாம்: பொன்னம்பலம் என்ற பேருடைய வெள்ளையம்மாளின் அண்ணன் மகனும் ரஞ்சிதத்துக்கு முறைக்காரனுமான ஒரு பயல்தான் சிங்காரத்துக்கு வலது கை போன்ற தோழனும்... சிங்காரத்துக்கு அவன் ராஜோபசாரம் செய்கிறானும் — எல்லாம் சாமியார் முடிந்து கொண்டு வந்து கோதையிடம் அவிழ்க்கிற 'உண்மை முத்துக்'கள் தாம்....

'சிங்காரம் சூதாடுவதில்லை' என்று அறிந்த கோதை உள்ளூற ஒருபுறம் மகிழ்ச்சியே அடைந்தாலும், சூதாடுகிறவனுக்கெல்லாம் பணத்தைச் சூறையாடுகிற சிங்காரத்தின் ஊதாரித் தனத்தை எண்ணி மிகவும் கலவரம் கொண்டாள்.

சிங்காரத்தை எப்படி நல்வழிப் படுத்துவது? அவன் அடக்க முடியாத, யாரையும் கைமீறிப் போகிற பிள்ளையாக வளர்கிறானே என்று எண்ணி வெண்ணி இரவெல்லாம் தூங்காத ஏக்கத்தில் கோதைக்கு இவ்வளவு





ராமு: ஏண்டா சோமு! கோடைச் சிரிப்பிதழில் உனக்கு முதல் பரிசு கிடைத்தால் என்ன செய்வாய்?

சோமு: ஊட்டிக்கு என் ஸ்டெனோவுடன் ஜாலியாகப் போவேன்.

ராமு: இரண்டாவது பரிசு கிடைத்தால்...?

சோமு: பெங்களூருக்கு மனைவியுடன் போவேன்.

ராமு: மூன்றும் பரிசு கிடைத்தால்...

சோமு: என் மாமியாரைக் கோடைக்கானலுக்கு அனுப்புவேன்.! —எம். மகாதேவன்

---

இளவயதில் தலைகூடத் திடீரென்று நரைக்க ஆரம்பித்து விட்டது.

தெரு வாசற்படியில் வண்டி நிற்கிறது. இன்று அமாவாசையானபடியால் ஐயர்வந்து திண்ணையில் காத்திருக்கிறார். அமாவாசை தோறும் தர்ப்பணம் செய்வதும், திதிகள் தவறாமல் 'திவசம்' கொடுப்பதையும் சிங்காரத்தைக் கொண்டு தவறாமல் நடத்தி வந்தாள் கோதை. அத்தகைய சாஸ்திர - சடங்குகளை நிறைவேற்றுவதில் சின்னம்மாளின் யோசனைகளைத் தவறாமல் தட்டாமல் கேட்டு நடத்தி வந்தான் சிங்காரம்.

ஆனால், சமீப காலமாய், அவன் பள்ளிக் கூடத்திலிருந்து நீக்கப்பட்டு அந்த விஷயத்தைக் கூட அவனுக்குத் தெரிவிக்காமல் தினந்தோறும் வண்டி கட்டிக் கொண்டு எங்கே போகிறான்? ஏன் பள்ளிக் கூடத்திலிருந்து நீக்கினார்கள்? என்றெல்லாம் அவனே சொல்லாமல், தான் ஏதும் கேட்பதில்லை என்றிருக்கும் கோதை — இன்று வழக்கம்போல் தகப்பனுக்குச் செய்ய வேண்டிய இந்தக் கடமைகளை ஆற்றுகிற விஷயத்திலாவது தன் வார்த்தைக்குக் கொடுத்திருந்த மதிப்பைக் காப்பாற்றுகிறானே என்று பார்க்கிற நிதானத்தோடு கூடத்தில் சாய்வு நாற்காலியில், ஒரு கையில் விசிறியுடன் ஈரக் கூந்தலை ஆற்றியவாறு உட்கார்ந்திருந்தாள்.

சிங்காரம் தன் அறையிலிருந்து பிரெஞ்சு நாட்டிலிருந்து இறக்குமதியான விலையுயர்ந்த நறுமண கந்தம் வீடெல்லாம் பரிமளிக்க, சரிகைக் கரை வேட்டி சரசரக்க, காதோரம் சுருள்சுருளாய் கட்டுக் குடுமியுடன் வருவதைப் பார்த்துக் கோதை உள்ளூறப் பூரித்துப் போனாள்...

'இவன் கறுப்பென்றாலும் பளிச் சென்று சலவைக்கல் மாதிரி ஒளி வீசுகிறான்' என்று நினைத்துக் கொண்டாள். இவள் தன்னிடம் கோபமாக இருப்பதையோ, அந்த மனஸ்தாபத்தில் தன்னிடம் பேசாமல் இருப்பதையோ உணராத சிங்காரம் வெளியில் போகும் போது வழக்கமாகச் சொல்லிக் கொள்ளும் தோரணையில் ''நான் வரேன் — சின்னம்மா'' என்று முனகியவாறு போனான்.

சிங்காரம் தன்னைக் கடக்கும் வரை, அவன் வளர்ந்து பெரிய வாலிபனாய் மாறி இருக்கிற தோற்றத்தில் லயித்திருந்த கோதை அவன் முதுகுக்குப் பின்னால் கோபமாக முறைத்துப் பார்த்துச் சற்றுக் கடுமையான குரலில் கூப்பிட்டு அவனை நிறுத்தினாள்: ''இந்தா சிங்காரம்!''

சிங்காரம் நின்று திரும்பி, ''என்ன சின்னம்மா'' என்று அவளது குரலில் என்றுமில்லாமல் தொனித்த கடுமைக்கு வியந்தவனாய்ச் சிரித்தான்.

அவன் பளீரென்று அசாதாரணமான வெண்மை கொழிக்கும் கோலத்தில் சிரித்த போது அவனது மேலுதட்டில் அரும்பியிருந்த மெல்லிய ரோமங்கள் சிலிர்த்து நின்றன.

''நீ உசிரோட இருக்கிற பெரியவங்களை மதிக்கா விட்டாலும் போகுது... செத்துப் போன உங்கப்பாருக்காவது மரியாதை குடு... இன்னிக்கி அமாவாசை, காத்தாலேயிருந்து ஐயிரு வந்து தெருவிலே காத்துக் கெடக்குறாரு... நீங்க தொரை வெளியே பொறப்பட்டுட்டீங்க... நான் இந்த வீட்டிலே ஒரு வேலைக்காரின்னாலும் எஜமானை ஞாபகப் படுத்தலாமேன்னு சொன்னேம்பா!...'' என்று அவனுக்குப் புத்திமதி சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, அவன் கோபித்துக் கொள்வானோ என்ற பயத்தில் கோதை முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொண்டு அழுதாள்!

''சின்னம்மா'' என்று பதைத்தோடி வந்து சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்த கோதையின் கால்களைக் கட்டிக் கொண்டான் சிங்காரம்.

(தொடரும்)

---

விமான நிலையங்களில் ஷூட்டிங் எடுக்கிறார்களே, படத்தயாரிப்பாளர் விமான நிலையத்துக்கு என்ன வாடகை கொடுக்க வேண்டும் தெரியுமா?

மூவாயிரம் ரூபாய் - ஒரு மணி நேரத்துக்கு.

— ஃபிலிம்ஃபேர் - ராமுசாமி



# SIXESS!





## Come, share our success-secrets as we enter the sixth year of mutual prosperity.

Over the last five years, we have served hundreds of Chit Groups successfully.

**And disbursed crores of Rupees.**

SECRETS? Our prompt payments. Personalised service. Cautious approach. Full integrity. And belief in long-term Chits that really benefit you.

**Because your financial security & profit also mean our success.**

Come, we'll serve your needs.



**Shriram**
**Chits & Investments Private Limited**
123, Angappa Naicken Street,
Madras 600 001.
Ph: 28545/37890

Shriram – **YOUR FINANCIAL FRIEND-IN-NEED.**

/ADWAVE/SCI/999

# அத்தியாயம் 28

யோகேசுவர மூர்த்தியின் வீட்டை ஆனந்த் அடைந்தபோது பிரமீளா பெல் பாட்டமும் ஷர்ட்டும் பனாமா கேப்பும் அணிந்து கையில் கிரிக்கெட் பாட்டுடன் வெளியே கிளம்பிக் கொண்டிருந்தாள். மாலைக் கதிரவனின் ஒளிபட்டு அவள் உருவம் தகதகத்தது. 'ஷூட் லைக் எ பிட்டன்' என்று ஆனந்த் நினைத்துக் கொண்டான்.

காரிலிருந்து இறங்கிய அவனைப் பார்த்துப் புன்முறுவலுடன் ''ஹல்லோ!'' என்றாள்.

''அப்படியே நில்! அசையாதே!'' என்றான் ஆனந்த். ''ஒரு ஃபிரெஞ்சுப் பெயிண்டிங் மாதிரி இப்போ நீ இருக்கே. சூரியக் கிரணங்கள் ஆசையோடு உன்னைத் தழுவுகின்றனவா இல்லே உன் உடலின் ஒளிதான் நாலா புறமும் பரவுறதா என்று புரியாத ஒரு நிலை!''

''அப்பா காரியமாக இருக்காங்க. நீங்க சற்று நேரம் காத்திருக்கும் படி இருக்கும். செக்ரட்டரிகிட்டே சொல்லிட்டு டிராயிங் ரூமிலே உட்கார்ந்திருங்க'' என்றாள்.

''எத்தனை நேரம் வேணும்னாலும் காத்திருக்கத் தயார், உன்னுடைய கம்பெனி மட்டும் இருக்குமென்றால்... நீ கிரிக்கெட் எப்படி ஆடறியோ என்னமோ எனக்குத் தெரியாது, ஆனா இந்த டிரெஸ்ஸில் நீ சார்மிங்காயிருக்கே. வாயேன் உள்ளே போய்ப் பேசலாம்.''

''ஸாரி, எனக்கு டைம் ஆயிடுச்சு, நான் வரேன்.''

''டு ஹெல் வித் யுவர் கிரிக்கெட்'' என்றான் ஆனந்த் கடுமையாக.

விழிகளில் கோபத்தைத் தேக்கிச் சரேலென்று நிமிர்ந்தாள் பிங்கி.

''உன்னைப் பொறுத்த மட்டில் ஆட்டம் ஆரம்பமாவதற்கு முன்பே ஆல் அவுட்டாகி விட்டது!''

அவளுக்குப் பகீரென்றிருந்தது. ''நீங்க என்ன சொல்றீங்க?''

''வாசலில் நின்னுதான் பேசணுமா? பிராக்டிஸ் மாட்ச்தானே? புரோகிராமை கான்ஸல் பண்ணு!'' அதிகாரம் தொனித்தது அவன் குரலில்.

பிங்கி திகிலுடன், திகைப்பும் வியப்பும் அடைந்தவளாக அவனை வீட்டினுள் அழைத்துப் போனாள். காரியதரிசியிடம், ''அப்பா கொஞ்சம் ஃப்ரீயானதும் ஆனந்த் வந்திருக்கிறார்னு சொல்லுங்க. முக்கிய விஷயமாய் அவசரமாகப் பார்க்கணுமாம்'' என்று கூறினாள். ஆனந்த் ஒரு சிகரெட்டை எடுத்து உதட்டில் வைத்துக் கொண்டதும் மேஜை மீது இருந்த லைட்டரை இயக்கி அதை அவன் பற்ற வைத்துக் கொள்ள உதவினாள். அப்போது தன் கரம் நடுங்காதிருக்க அவள் மிகுந்த பிரயாசைப்பட வேண்டியிருந்தது.



தீ.ராஜேந்திரன்

ஆஷ் டிரேயை நகர்த்தி வைத்தாள். 'துணைக்கு அப்பா வந்து விட மாட்டாரா' என்பது போல் அவர் அறைக் கதவைப் பார்த்தாள். ஏதோ படுமோசமான செய்தியுடன்தான் ஆனந்த் வந்திருக்கிறான் என்பது அவளுக்குப் புரிந்து விட்டது. தைரியத்தை இழக்காதே என்று தனக்குத்தானே கூறிக் கொண்டாள்.

விஷயத்தைச் சொல்ல ஆனந்த் அவசரப் படவில்லை. அவளுக்கு அதிர்ச்சி அளிக்க விரும்பாததால் நிதானமாகப் பேசுவது போல் போக்குக் காட்டினான். இரண்டு தரம் சிகரெட் புகையை இழுத்து வெளியேற்றிய பிறகு, ''சத்யாவைப் பற்றி நீ என்ன நினைக்கிறே?'' என்று கேட்டான்.

''இதென்ன கேள்வி? அவர் எனக்குக் கணவராக வரப் போகிறவர். கல்யாணத்துக்குத் தேதி நிர்ணயிக்க வேண்டியதுதான் பாக்கி!''

''அதனால்தான் கேட்கிறேன்'' என்றான் ஆனந்த். ''கல்யாணமே ஆகிவிட்டதென்றால் நாம் பேசிப் பயனில்லையே!''

''பேச என்ன இருக்கு? ஐ லவ் ஹிம்.''

''ஆழ்ந்த காதலா, அல்லது பாஸிங் ஃபேன்ஸியா?''

''காதல் என்று சொன்னால் எனக்கு ஒரே ஒரு அர்த்தம்தான். அப்படி இல்லையென்றால் ஹி இஸ் மை குட் ஃபிரெண்ட் என்று சிநேகம் கொண்டாடியிருப்பேனே தவிர லவ் என்கிற வார்த்தையைப் பயன்படுத்தியிருக்க மாட்டேன்.''

''அவனைப் பற்றிச் சில விஷயங்கள் தெரிய வந்தால் உன் மனசு மாறுமா?''

''அது எனக்குத் தெரிய வருகிற விஷயங்களைப் பொறுத்தது. நான் நளாயினி, அருந்ததி, சந்திரமதி வரிசையில் வந்தவளில்லை. ஐ ஆம் எ மாடர்ன் கேர்ள். நவீன எண்ணங்களை உடையவள். என்னுடைய நியாயமான சுதந்திரங்களை அவர் கட்டுப்படுத்த மாட்டார் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு. அது சரி, இப்போ எதற்கு இந்தப் பேச்சு? என்னைக் கிரிக்கெட் ஆடாதே என்றோ அல்லது மாதர் உரிமைகள் பற்றிப்



பேசாதே என்றோ சத்யா தடை விதிக்கப் போவதில்லை. அந்த அளவுக்கு அவரை நான் புரிஞ்சுக்கிட்டிருக்கேன்.''

''அவனைப் பற்றி நீ புரிஞ்சுக்க வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கு பிங்கி'' என்றான் ஆனந்த்.

''யாரைப்பற்றி?'' என்று கேட்டுக் கொண்டே யோகேஷ் வந்தார்.

''உங்களுக்கு மாப்பிள்ளையா வரப்போகிற வர் பற்றி...''

''நீ இன்னும் கிளம்பலையா பிங்கி?'' என்று கேட்டவாறே அப்போது அங்கே வந்த அவள் தாயார் லலிதா, ''மாப்பிள்ளைக்கு என்ன? மூக்கும் முழியுமாக, ஆஜானுபாகு வாகப் பார்க்க நல்லாத்தானே இருக்கார்?'' என்றாள்.

''பார்க்கப் பிரமாதமாகத்தான் இருக் கான்; ஆனால் அவன் கம்பெனியிலே ஒரே ஊழலாம்!''

''எந்த கம்பெனியிலே எந்த நிர்வாகம் ஊழல் பண்ணலே?'' என்று கேட்டார் யோகேஷ். ''ஆனந்த்! நீ தாறுமாறாக வாரி இறைக்கிறாயே பணம், அதெல்லாம் நீயோ உன் அப்பாவோ நேர்மையாகக் கணக் கெழுதிச் சம்பாதித்ததுதானா? உன்னிடமோ அல்லது என்னிடமோ பிளாக் மணியே கிடை யாதா?''

''அதை விட்டுத் தள்ளுங்க ஸார், சின்ன விஷயம்'' என்றான் ஆனந்த். ''எடுத்த எடுப் பில் பெரிய செய்தியைச் சொல்லி உங்களுக்கு அதிர்ச்சி அளிக்க விரும்பாததாலே அப்படி ஆரம்பிச்சேன்... நீங்க நினைக்கிற மாதிரி சத்யா பெரிய மனுஷன் வீட்டுப் பிள்ளையே இல்லே!''

''என்ன? என்ன? இதென்ன கூத்து?'' என்றாள் லலிதா.

''ஓ இன்ஈஸ் ஷாக்கிங்''என்றார் யோகேஷ். ''ஆனந்த்! ஏதாவது தப்பும் தவறுமாக உளறி வைக்காதே. யோசித்துப் பேசு!''

பிங்கி சிலையாகி விட்டிருந்தாள். அவள் முகத்தில் ஏற்படக் கூடிய உணர்ச்சி மாறு தல்களைக் கவனித்துத் திருப்தி அடைய ஆசைப் பட்ட ஆனந்துக்கு ஏமாற்றமே ஏற்பட்டது.

''நான் நன்றாகத் தெரிந்து கொண்டுதான் பேசுகிறேன் ஸார்; வைத்தியலிங்கம் தாமே தம் வாயால் சொன்னதை நானே என் காதால் கேட்டேன்.''

''அவர் என்ன சொன்னார்? நீ என்ன கேட்டே? விவரமாகச் சொல்லேன்!''

ஆனந்த் இந்தக் கட்டத்தை ரொம்ப ரசித்தவனாக வைத்தியலிங்கம் போலவே தன் குரலை மாற்றிக் கொண்டு அவரைப் போலவே பேசிக் காட்டினான்: ''யார் பெற்ற மகன்டா நீ? எனக்குப் பிறந்த மகனா நீ? தனம் தன் வயிற்றிலே ஒன்பது மாதம் சுமந்து பெற்றாளா உன்னை? அப்படி எங்க பிள்ளையா இருந்தா நீ இந்த மாதிரி நடந் துக்க மாட்டியே? என் ரத்தத்தின் ரத்தமாய் இருந்தால் நீ யோக்கியமாய் நடந்துக்கு வியே!''

''அட ஈரகசாரமே! இப்படி வைத்திய லிங்கம் சொன்னாரா? நிஜமாகவா? சத்யா வைப் பார்த்தா?'' என்று லலிதா கேட்டாள்.

''அவருக்கென்ன பைத்தியம் பிடிச்சுப் போச்சா?'' என்று பிங்கி கேட்டாள் நம் பிக்கை பிறக்காதவளாக.

ஆனந்துக்கு உற்சாகம் கரை புரண்டது. ''அதெல்லாம் ஒன்றுமில்லை. நல்ல நிட சித் தத்தோடு தான் பேசினார். சத்யா கெட்டிக் காரத்தனமாக நடந்து கொள்ளுவான் என்று நம்பிப் பெரிய பதவியில் வைத்தார். குரங்கு தலையில் பனங்காயை வைத்தால் தாங்குமா? அந்த மடையனுக்கு நிர்வாகம் பற்றி ஏ. பி. ஸி. கூடத் தெரியலே. ஏகப்பட்ட நஷ்டம். ஊழல் வேறு. ஸ்ட்ரைக், லாக்அவுட் எல்லாம் தொடர்ந்தது. அதனாலே வைத்தியலிங்கம் கோபமடைந்து உண்மையை உடைச்சுட் டார், சிதர் தேங்காய் மாதிரி! மறுபடியும் வைத்தியலிங்கம் மாதிரி நடித்துக் காண்பித் தான் ஆனந்த்: ''யூ ஆர் நாட் மைஸன்! நீ என் பிள்ளை இல்லே! இன்றும் இல்லை, முன்பும் இல்லை, இனியும் இல்லை!''

''ஆமாம் ஸார்! அப்படித்தான் சொல்லிட் டார்'' என்று வாசற்பக்கம் கதவருகே குரல் கேட்டது. சத்யா உடல் தள்ளாடுவதைத் தவிர்க்கச் சுவரையும் நாற்காலியையும் பற் றியபடியே முன்னேறினான். ''நான் அனாதை யாம்! அனாதை ஆசிரமத்திலிருந்து என்னை

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

மேலட்டை:



## சித்திரமும் கைப்பழக்கம்!

நாட்டியம், பாட்டு ஆகியவை மட்டுமின்றி கதை, கவிதை, முதலியவைகளையும் எழுது கிறார் அட்டையிலிருக்கும் ஜி. பத்மினி. தஞ்சாவூர் ஓவியங்களை முதலில் கற்க ஆரம் பித்த இவர், 'ஓவியம் வரைய வேண்டும் என்ற ஆர்வம் என்னுள் எப்பொழுதும் ஒளிந்துக் கொண்டேயிருக்கிறது' என்று கூறுகிறார். ஒருபுகைப் படம் எடுத்து விட்டு அடுத்த படம் எடுப்பதற்குள் சுமார் 10 நிமிடங்களில் மேலட்டையில் காணப்படும் ஓவியத்தை வரைந்துவிட்டார்.

ருக்மிணி ராமச்சந்திரன்

வண்ணப்படம் எடுத்தவர் : ரோஹிணி

எடுத்து வந்து வளர்த்தார்களாம். அது உண்மையாகவே இருந்தாலும், இப்ப, இத்தனை நாள் கழிச்சு அதைச் சொல்லலாமா ஸார்? எவ்வளவு கொடுமை!''

''இந்தாப்பா சற்று இரு! கொஞ்சம் அப்படியே அங்கேயே நின்னுக்க'' என்றார் யோகேஷ். அவரது இந்தப் போக்கை ரொம்ப ரசித்த ஆனந்துக்கு அடுத்து பிங்கி செய்த காரியம் சகிக்க முடியாததாக இருந்தது.

''அப்பா!'' என்று கோபமாக அழைத்து எழுந்தாள். ''நம் வீடு தேடி வந்தவரை இப்படியா வரவேற்பது?'' என்றவள் முன்னேறிச் சத்யாவின் கரம் பற்றி அழைத்து வந்து அமரச் செய்தாள்.

''நீங்க கவலைப்படாதீங்க, சத்யா! வைத்தியலிங்கம் எவ்வளவு படிச்சிருந்து என்ன பிரயோஜனம்? ஆல் மென் ஆர் பார்ன் ஈக்குவல் என்பது அவருக்குத் தெரியாமல் போயிட்டதே'' என்றாள் அனுதாபத்தோடு.

''ஆமாம் ஸார்'' என்று நாத்தழுதழுக்கப் பேசினான் சத்யா: ''அவருக்கு அது புரியாமத்தான் போயிட்டுது. ஆனால் நீங்க உலகமெல்லாம் சுற்றி வந்தவங்க. விசால மனம் படைத்தவங்க, ரொம்ப படிச்சவங்க; பிஸினஸ்லிலே பல பெரிய மனிதர்களோடு பழகறவங்க — உங்களுக்குத் தெரியும் மனிதனும் பிறந்தவர்களிடையே ஏற்றத் தாழ்வு இல்லே என்பது. அதனாலே என்னை ஒதுக்க நினைக்க மாட்டீங்க, மாப்பிள்ளையா ஏற்றுக் கொள்ளத் தயங்க மாட்டீங்க...''

''ஏய் ஏய்! நிறுத்து! என்ன நீ பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறே? நாங்க என்ன முடிவு பண்ணப் போறோம்னு எங்களுக்கே தெரியலே. நீ பாட்டுக்கு ஏதேதோ சொல்லிக்கிட்டே போறியே?''

''என்னங்க இது? யார் பெத்துப் போட்ட புள்ளையோ, என்ன இழவோ? கல்யாணமாகிப் பிறந்தானோ தாலி கட்டாமலேயே பிறந்தானோ? என்ன ஜாதியோ குலமோ? நம்ம பிங்கியை எப்படிங்க இவனுக்குத் தரது?''

''அம்மா!'' என்று இரைந்தாள் பிங்கி. ''இப்படி மனுஷத் தன்மையே இல்லாமல் பேச உங்களுக்கு எப்படி மனம் வருது?''

''பிங்கி! வில் யூ ப்ளீஸ் ஷட் அப், அட் லீஸ்ட் ஃபார் ஸம் டைம்?'' என்றார் யோகேஷ். ''திஸ் இஸ் எ ஸீரியஸ் மேட்டர்.''

ஆனந்த் தான் அடைந்த மகிழ்ச்சிப் பரவசத்தை வெளிக் காண்பித்துக் கொள்ளாமல் மிக இயல்பாக நடந்து கொள்பவன் போல் பிரமீளாவை நெருங்கினான். அவள் கரத்தைப் பற்றித் தட்டிக் கொடுத்து, ''பிங்கி ப்ளீஸ் காம் டௌன். ப்ளீஸ் கண்ட்ரோல் யுவர் ஸெல்ஃப்'' என்று அமைதிப் படுத்தினான்.

''ஆனந்த்! அங்கே என்ன நடந்தது? முழு விவரமும் சொல்லேன்?'' என்று கேட்டார் யோகேஷ். ''வைத்தியலிங்கம் முடிவாக என்ன சொன்னார்? 'அனாதை' என்றார் சரி, ஆனா வளர்ப்பு மகன் என்றாவது ஒப்புக் கொண்டாரா? அவர் சொத்தெல்லாம் இவனுக்கு வந்து சேருமா, வராதா?''

''அது எனக்கு எப்படித் தெரியும்?'' என்றான் ஆனந்த். ''அந்த மனுஷனுக்கு ஏற்




புகைப்படம்: ஆனந்த்சுவாமி

கெனவே ஒரு ஹார்ட் அட்டாக் வந்தாச்சு. உயில் எழுதிட்டார்னும் தெரியும். ஆனா எப்ப இவன் அப்பாவை எதிர்த்துப் பேசி விரோதிச்சுக்கிட்டானோ இனிமே அவர் உயிலே மாற்றினாலும் மாற்றி விடலாம். அவருக்கு ஒரு செல்லப் பிள்ளை இருக்கான். பேரு தீபக். வைத்தியலிங்கத்துக்கு அவன் நல்லாச் சோப்பு போட்டு வைத்திருக்கான். யார் கண்டது? தன் சொத்து எல்லாத்தையும் அவர் தீபக்

ஹோட்டலில் ஒருவர்: ஸர்வர், என்ன இருக்கு?

ஸர்வர்: இட்லி வடை, தோசை...

ஒருவர்: எது நல்லா இருக்கோ, அதைக் கொண்டு வா.

ஸர்வர்: சாருக்குத் தண்ணி கொண்டு வைப்பா.

எஸ். சந்திரசேகர்.



# கிரிக்கெட் கற்கலாம்! 3

கதை: கே. சந்திரசேகர்
படம்: ராஜ்.. தயாரிப்பு: குன்றுமணி

## இன்ஸ்விங் பௌலிங்

**பந்து கிரிப்:**



சுட்டு விரலையும் நடு விரலையும் பந்தின் நூல் கோட்டுக்கு வெளியே படத்திலுள்ள படி பந்தின் மீது பதிக்க வேண்டும். கட்டை விரலின் வலப் பக்கம் நூல் வரை கோட்டின் நடுவில் பதிந்து விடவும்.



பந்தை வீசும் தருணத்தில் 'சீம்' பகுதி ஃபைன் லெக் திசை நோக்கி இருத்தல் அவசியம்.



விக்கெட் கோட்டை நெருங்கும் தருணத்தில் வலது தோள் ஃபைன் லெக் திசை நோக்கி இருக்க வேண்டும்.



பந்து வீச்சுக் கோட்டின் அருகே முன் பாதத்தைப் பதிக்க வேண்டும். அதாவது அந்த முன் பாதம் வலது பாதத்துக்குக் குறுக்கே 'ஆஃப்சைட்' திசை நோக்கி இருத்தல் தேவை. ஆனால் ஓர் கோட்டில் அல்ல. இப்படிப் பாதங்களைப் பதிப்பதனால் உங்கள் உடல் பந்து வீசும் தருணத்தில் சரியாக இயங்க முடியும்.

பந்தை எறிந்த பிறகு வலது கையை வலது பக்கமாகவே கீழிறக்க வேண்டும். இப்படி செய்வதால் சீம் பகுதி ஃபைன் லெக் திசை பக்கம் தானாகவே செல்லும்.

குக்கே எழுதி வைச்சு மகளையும் அவனுக்கே கல்யாணம் பண்ணிக் கொடுத்துடலாம். அவன் பேரிலே அவருக்கு இருக்கிற மோகத்திலே மத வேற்றுமையைக் கூட லட்சியம் பண்ணக் காணோம்!''

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்த சத்யா நிமிர்ந்தான். ''என் அப்பா அப்படியெல்லாம் அவசரப்பட்டுக் காரியம் செய்வார் என்று நான் நினைக்கலே ஸார். அப்படிச் செய்கிறார் என்றே வைத்துக் கொள்வோம். உங்களுக்கும் உங்க மகளுக்கும் நான் முக்கியமா, அல்லது எனக்கு வரப்போகிற சொத்து முக்கியமா? உங்க மகள் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறாளா? அல்லது என் சொத்தையா?''

''அப்பா! உங்களுக்குத்தான் கோடிக் கணக்கில் செல்வம் இருக்கே! போதாதா?'' என்று சீறினாள் பிங்கி. ''வீட்டைப் பெருக்கினா வைரங்கள் அகப்படும்னு அம்மா அடிக்கடி பெருமை அடிச்சுப்பாளே! மாப்பிள்ளை எவ்வளவு சொத்து கொண்டு வருவார் என்று வேறு யோசிக்கணுமா?''

''யூ மிஸ் மை பாயிண்ட்'' என்றார் யோகேஷ். ''இது பணப் பிரச்னை இல்லே; கௌரவப் பிரச்னை. அந்த விஷயத்தில் இவன் பிறவியிலே பூஜ்யம் என்று புரிஞ்சு போச்சு. ஆனா வைத்தியலிங்கம் இவனைத் தம் மகனாகப் பாவித்துச் சொத்தை யெல்லாம் எழுதி வைத்தால் ஓரளவாவது குடும்ப கௌரவம் இவனைச் சேரும். இதுவுமில்லே, அதுவுமில்லே என்றால்...''

''ஸார்!'' என்று நெஞ்சடைக்க அழைத்தவாறு எழுந்தான் சத்யா. ''எனக்கு நல்லாச் சூடு போட்டுட்டீங்க ஸார்! என் அப்பா என் மனசைப் புண்படுத்தினார். அதன் மீதே நீங்க பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கோலைப் பாய்ச்சிட்டீங்க! ரொம்ப தாங்க்ஸ்; நான் வரேன்!''

''சத்யா!'' என்று கரகரத்த குரலில் தீனமாக அழைத்து எழுந்தாள் பிரமீளா. வாசலுக்குப் பறந்தோடிச் சென்று சத்யாவை அணைத்து ஆறுதல் கூறத் துடித்தவளை ஆனந்தின் அழுந்திய பிடியும் தகப்பனாரின் அதட்டல் குரலும் தடுத்து நிறுத்தின. ''பிங்கி ஸிட் டௌன்!'' என்று உத்தரவிட்டார் யோகேஷ்.

''அப்பா இது சரியில்லே! நீங்க பெரிய தப்புப் பண்ணறீங்க'' என்று கூறி அழுதாள் அவள்.

''சும்மா இருடி! அப்பாவுக்கே புத்தி சொல்லப் புறப்பட்டுட்டியா? மாதர் சுதந்திரம் அது இதுன்னு பேசிப்பேசி உனக்குத் திமிர் அதிகமாயிட்டுது! உனக்கு ரொம்ப இடம் கொடுத்துட்டோம்னு இப்பத்தான் புரியுது'' என்று வனிதா இரைந்தாள்.

வெளியே சத்யாவின் கோபத்தைப் பிரதிபலிப்பது போல் அவன் கார் உறுமிக் கொண்டு புறப்பட்டுச் சென்றது. ஆனந்தின் உள்ளம் மகிழ்ச்சியில் நர்த்தனமாடியது. பிங்கியின் மனம் ஒடிந்து சோகத்தில் மூழ்கியது.

(தொடரும்)

# தனித்துவத்தை இழக்காத தேசீய ஐக்கியம்!



ஜனாதிபதி ஜயவர்த்தனாவை இந்திய வம்சாவழியினரின் ஒப்பற்ற தலைவர் திரு. சௌமியமூர்த்தி தொண்டமான் வரவேற்கிறார்.

- படங்கள் : வெஸ்லி செல்லய்யா

சுமார் இரண்டு லட்சத்துக்கு மேற்பட்ட இந்திய வம்சாவழியினர்களான தோட்டத் தொழிலாளர் ஊவா மாகாணத்தின் புராதனத் தனி நகரான பதுளையில் சென்ற மாதம் கூடினர். அங்கு நடைபெற்ற இலங்கைத் தொழிலாளர் காங்கிரஸின் 2வது மகாநாடு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. தமிழ் மக்கள் தங்களது கல்வி, கலாசார சமய தனித்துவத்தைப் பேணிக் காக்கும் அதே சமயத்தில், தேசிய ஐக்கியத்தையும் வலுப்படுத்த வேண்டுமென்ற காங்கிரஸின் அடிப்படை இலட்சியம் அன்று நகரெங்கிலும் பிரதிபலித்தது. தேசியக் கொடிகளும் காங்கிரஸின் உதய சூரியன் கொடிகளும் ஒன்றின் பக்கத்தில் ஒன்றாக பட்டொளி வீசிப் பறந்தன. தமிழ்க் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் வாழை மரங்களும் சிங்களக் கலாசாரத்தைப் பிரதிபலிக்கும் தென்னங் குருத்து தோரணங்களும் நகர் முழுவதிலும் தென்பட்டன. எதிர்காலத்துக்கு இது ஒரு நல்ல அறிகுறி.

எதிர்காலத்தைப்பற்றியே ஜனாதிபதி ஜே. ஆர். ஜயவர்த்தனாவும் தமது உரையில் குறிப்பிட்டார். நாட்டின் தலைவர் காங்கிரஸ் மகாநாட்டில் கலந்து கொள்ளுவது இதுவே முதன்முறை. அவருடைய பிரசன்னமும் பிரசங்கமும் இந்திய வம்சாவழியினர்களுக்கும் சிங்கள மக்களுக்குமிடையில் உருவாகியுள்ள புதிய உறுதியான தோழமையை எடுத்தியம்புவதாக இருந்தது.

''தோட்டத் தொழிலாளர்களைச் சுறையாடும் காலம் மலையேறி விட்டது. உங்கள் தலைவர் திரு. தொண்டமான் முயற்சியினால் உங்கள் குறைகள் பலவற்றையும் நீக்கி விட்டோம். இன்னும் என்ன குறைபாடுகள் இருந்தாலும் அவைகளைப் போக்க அரசு காத்திருக்கிறது. இலங்கைப் பிரஜைகளான சகல மக்களும், அவர்கள் எந்த வகுப்பினராயினும், சமயத்தவராயினும், மொழி பேசுபவராயினும் சரி, சரிசமமானவர்களென்பதை நாங்கள் பகிரங்கமாகப் பிரகடனப் படுத்தியிருக்கிறோம். இதைச் செயல்படுத்தியும் வருகிறோம். புதிய தார்மீகச் சமுதாயத்தை நோக்கித் தோளோடு தோள் சேர்த்து வீறு நடை போட்டு முன்னேறுவோம். வாரீர்!'' என்று ஜனாதிபதி ஜயவர்த்தனா இந்திய வம்சாவழியினரை அறைகூவியழைத்தார்.

காங்கிரஸ் மகாநாட்டை ஆரம்பித்து வைத்த தலைவர் திரு. சௌமியமூர்த்தித் தொண்டைமானின் அக்கிராசனப் பிரசங்கம் ராஜ தந்திரத்தையும் பல்லாண்டு அனுபவத்

காங்கிரஸ் மகாநாட்டில் பிரபல தென்னிந்திய நடிகை சுஜாதா சிங்களத்தில் சில வார்த்தைகள் பேசினதைக் கேட்டதும் அவரை அருகில் அழைத்துப் பேசினார் ஜனாதிபதி ஜயவர்த்தனா. பிறந்த நாட்டு மொழிகளிலொன்றான சிங்களத்தை என்றும் மறவாமலிருப்பதற்காக அவரைப் பாராட்டினார்.






தையும் தன்னலமற்ற தியாகத்தையும் பிரதிபலிப்பதாக இருந்தது. தங்களுடைய தனித்துவத்தை இழக்காமலே தேசிய ஐக்கியத்தை வளர்ப்படுத்துவதுதான் காங்கிரஸின் இலட்சியம் என்று அவர் கூறியபொழுது காது செவிடுபடும்படியான கரகோஷம் எழுந்தது.

அவருக்கு அடுத்தபடியாக வளரும் இளம் சமுதாயத்தின் பிரதிபலிப்பாக விளங்குபவர் காங்கிரஸின் பொதுக் காரியதரிசி திரு எம். எஸ். செல்லச்சாமி. அவருடைய பேச்சை ஒருமுறை கேட்டால் என்றென்றும் செவிகளில் அது ரீங்காரம் செய்து கொண்டிருக்கும். ஒளிவு மறைவின்றிப் பட்டவர்த்தனமாகப் பேசுவது அவருடைய இயல்பு.

இவ்வருட மகாநாட்டில் இந்தியத் தமிழ்க் கலைஞர்களான ஜெமினி கணேசன், நாகேஷ், சுஜாதா ஆகியவர்களும் கலந்து கொண்டார்கள். அவர்கள் தலைமையில் அற்புதமான கலைநிகழ்ச்சிகள் அனைவரையும் மகிழ்வித்தன. கதம்பம் ஆசிரியர் திரு. கே. வி. எஸ். மோகன் தமிழகக் கலைஞர்களை இங்கு அழைத்து வந்திருந்தார்.

—ரஜனி

# "THE SWARM"

ஹெலி காப்டர் விழுந்து நொறுங்குகிறது. காரில் வந்த கணவன் – மனைவி இறக்கின்றனர். விஞ்ஞானி மரணமடைகிறார். ரயிலை ஓட்டும் இன்ஜினியர்கள் இறக்கின்றனர். பயணிகளோடு ரயில் தான் தூளாகிறது. அணு சோதனை நிலையம் அழிகிறது – இத்தனையும் யாருடைய வேலை? கோடானு கோடி தேனீக்களேதான்!

''தி டவரிங் இன்பெர்னோ'' ''தி போஸிடான் அட்வென்சர்'' ஆகிய சாகஸப் படங்களை ஏற்கெனவே தந்த இர்வின் ஆலன், தேனீக்களைப் பற்றி நன்கு ஆராய்ந்து, 22,000,000 தேனீக்களை இப்படத்தில் உலாவ விட்டிருக்கிறார். அவற்றுடன் பிரபலமான பதின்மூன்று நட்சத்திரங்களும் நடிக்கிறார்கள். படப்பிடிப்பின் போது தேனீக்கள் கொட்டுவதால் நடிகர்கள் துன்பமடையாதிருக்க அவை பற்றி நன்கு அறிந்த வல்லுனர்களையும் ஸ்டண்ட் ஆட்களையும் நியமித்தனர்.

படையெடுத்து வந்து அமெரிக்க நகரத்தை முற்றுகையிடும் தேனீக் கூட்டங்களை ஒழிக்க, ஒரு முறிவு மருந்தைக் கண்டுபிடிக்கின்றனர். பெட்ரோலில் தோய்க்கப்பட்ட பல தீக் கோளங்கள், கைகுண்டு, விஷவாயு இன்னும் எத்தனையோ வழிகளில் தேனீக்களைக் கொல்லப் பார்க்கின்றனர். எதுவுமே பயன் தராத வேளையில் ஒரு தந்திரம் பலிக்கிறது. தேனீக்களின் பதிவு செய்யப்பட்ட ஒலியினை அவை முன் ஒலிபரப்பி அவைகளை ஈர்த்துச் சென்று இறுதியில் கடலில் அழிக்கின்றனர். ''தி ஸ்வார்ம்'' என்ற தலைப்பு கொண்ட இப்படம் வார்னர் பிரதர்ஸ் தயாரிப்பு.

–த.மு.ச.



# ராஜ காஜேனா

## 31. சத்திய வாக்கு!

மைசூர் எல்லையை அடைகிறபோதே பலப்பல செய்திகள் காதுகளில் நாறுமாருக மோதத் தொடங்குகின்றன. ...

குதூகலத்தின் தலையில் ஓங்கித் தட்டிக் குமுங்கச் செய்கிற அந்தப் பயங்கரச் செய்திகளால் அதிகமாக வெருட்சியும் மருட்சியும் காண்கிருள் ரங்கநாயகி. இதனுல் தனது அருமைக் காதலர் திப்பு கல்தானுக்கு ஏதும் நிகழ்ந்து விடக் கூடாதே என்று அவளது பூஞ்சை மனம் ஸ்ரீரங்கநாதப் பெருமாளை வாழ்த்திக் கொண்டதோடல்லாது, மனத்துள் கைப்பான ஒரு வஞ்சினத்தையும் மேற்கொள்கிறது...

குதிரையின் வேகத்தைச் சற்றே மட்டுப் படுத்துகிருன் பசவராஜ்...

வழியில் அவன் கேள்விப் பட்டவைகளைக் காட்சி ரூபமாகப் பார்க்கப் போகிற தருணம்...

அதற்கு முன்னேடியாகச் சில வீரர்கள் — கன்னூரில் அப்துல் கரீமுக்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தியவர்கள் — ரத்தக் களரி ரணகளரியாகக் குதிரைகளில் தப்பியோடி வருகின்றனர். அவர்களைக் கண்ட பசவ ராஜின் கண்களில் கோபாக்கினி கொழுந்து விடத் தொடங்குகிறது; பசவராஜைக் கண்ட அந்த வீரர்களுக்கோ, உணர்ச்சி மயமான ஆவேசாக்கினி புறப்பட்டு, ''பசவராஜ் வாழ்க!'' என்று தங்களையும் மறந்து இரைகிருர்கள்! ஏதோ திப்பு கல்தானே தங்கள் முன் தரிசனம் தந்து விட்டது போன்ற குதூகலத்தில் பீறிட்டு எழுந்த ஆவேசக் குரல்களாகத் தெரிகின்றன!

அனைவரையும் கையமர்த்தி நடந்த விஷயங்களை மீண்டும் ஒன்று விடாது கேட்டறிவதில் தனது நேரத்தைச் செலவிடுகிருன் பசவராஜ். அது தேவையானது என்றும் உணருகிருன்.

அப்துல் கரீமின் அட்டகாசச் செயல்களையும் அடாத நிலைகளையும் ஆட்சியைக் கைப்பற்ற





ஏற்படுத்திக் கொண்ட அல்பமான போர்த் தந்திர முறைகளையும் கேள்விப்படக் கேள்விப் படக் கொழுந்துவிட்ட அவனது கோபாக் கினி, தீப்பற்றி ஜுவாலை விடத் தொடங்கு கிறது...

''இப்புவை ஆதரிக்கும் வீரர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்?'' — பசவராஜின் குரலில் ஒரு சந்தேகம் தெரிகிறது.

''ஏறத்தாழப் பாதிக்கு மேல் நமது வீரர்கள் தான் பசவராஜ் சாகேப்!'' என்றான், ஒரு நன்றியுள்ள இஸ்லாமிய வீரன்.

''நல்லது நீங்கள் அனைவருமே என்னைப் பின்தொடருங்கள்'' என்று கூறிவிட்டுக் குதிரையைக் காலால் தட்டி விடுகிறான். அது வும் நாட்டின் உட்பூசலை உணர்ந்ததே போல் கனைத்துப் பறக்கிறது.

பின்தொடர்ந்த வீரர்கள், தங்களுக்குள் ரகசியமாக நோக்கிக் கொள்கின்றனர். அந்த நோக்கலில் படிந்திருந்த ஐயத்தின் வீச்சு, ரங்கநாயகியைப் பற்றியதுதான்...

'பசவராஜ்! ரங்கநாயகியை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டான்' என்கிற வதந் தியை மெய்ப்பிப்பது போல அவளைக் குதிரை யின் முன் பக்கத்தில் கூச்சமின்றி அமர்த்திக் கொண்டு வந்த காட்சி, சாதகமாக அமைந்து காணப்பட்டது. இதன் உட்பொருள் என்ன வாக இருந்தால் என்ன? இப்போது நாடு காக்கப் படவேண்டும். இப்புகல்தானுக்கு எந்த ஆபத்தும் நிகழ்ந்துவிடக் கூடாது என் பதில் அவர்களது ஆவல் மேலோங்கி நின்றது.

குதிரையை நேரே ஸ்ரீரங்கநாதர் கோயி லுக்கே செலுத்திச் சென்றான் பசவராஜ். ரங்கநாயகியை விட்டுச் செல்ல வேறு எந்த இடமும் தகுந்த பாதுகாப்பாக அவனுக்குத் தெரியவில்லை. 'ஸ்ரீரங்கநாதா! நீயே தஞ்சம்!' என்பது போலக் கோயிலை நாடியதும் அவன் இறங்கினான்: ரங்கநாயகியையும் இறக்கி விட்டான்.

''ரங்கநாயகி! நான் திரும்புகிற வரையில் நீ இந்தக் கோயிலை விட்டு எந்த விதக் கார ணத்தை முன்னிட்டும் நகரக் கூடாது. உனக்கு இந்த வீரர்கள் அனைவரையுமே காவல் நிறுத்தி விட்டுச் செல்கிறேன்!'' என்றான் பசவராஜ். அவனது குரலில் ஏதோ ஒரு தீர்க்கம் தெரிந்தது.

''போர்க்களத்துக்குத் தானே புறப்படு கிறீர்கள்?''

''ஆமாம்: எனது நண்பனது வைரிகளைச் சூறையாட வேண்டும்.

''ரங்கநாதன் வெற்றியே அளிப்பான்!''

''மகிழ்ச்சி சகோதரி! உனது இந்த வாழ்த்தே போதும்! நிச்சயம் ஸ்ரீரங்கப் பட்டினம் காக்கப்படும்! எனது நண்பன் திப்பு விடம் இதனை ஒப்புவிப்பேன். அது வரை யில்...!''

''இந்தக் கோவில் வாசற்படியை விட்டுத் தாண்ட மாட்டேன். உங்கள் சொல் லட்சு மணன் கிழித்த கோட்டினும் வலிமை வாய்ந்தது!''

''சீதையும் இவ்விதம்தான் சொன்னாள். லட்சுமணன் நம்பிப் புறப்பட்டான். அதனால் நடந்தது வேறு! என்னைத் தவிர வேறு எவர் வரினும் நீ இந்த ஸ்ரீரங்கநாதர் ஆலயத்து வாசற்படியைத் தாண்டவே கூடாது. கைமேல் அடித்துச் சத்தியம் செய்!''

''சத்தியம் அவசியம் தானா அண்ணா?''

''மிகமிக அவசியம் சகோதரி! யாராவது ராஜ தந்திரமாக எதையாவது கூறி அழைக்க நீயும் நம்பிப் புறப்பட்டு விடுவாய்! நான் எனது நண்பனுக்குப் பதில் சொல்லியாக வேண்டும். எனவே ஸ்ரீரங்கநாதர் மீது சத் தியம் செய்து கையடித்துத் தரவேண்டும்.''

ரங்கநாயகியும் அவனது மன நியாயத்தைப் புரிந்து, அதன்படி ஒரு நிறைவு தரவேண்டி அவ்விதமே ''ஸ்ரீரங்கநாதர் மீது சத்தியம், நீங்கள் வந்தாலன்றி வேறு யார் வந்து அழைத் தாலும் இந்த ஆலயத்து வாசற்படியைத் தாண்டி வரமாட்டேன்!'' என்று கூறிக் கை மேல் கையடித்து நிறைவு தந்தாள்.

சுற்றியிருந்த வீரர்களுக்குக் கடுமையாக ஆணையிட்டான்: ''உங்கள் சுல்தானாவைக் காப்பது உங்கள் கடமை! இதைத் தவிர அதிகமாகச் சொல்லத் தேவையில்லை.''

'சுல்தானா...!'

சுற்றியிருந்தவர்களுக்கே வியப்பு: இதில் ஏதோ மர்மம் இருக்கிறது என்ற அளவில் அவர்கள் உத்தரவைச் சிரமேல் கொண்டு காவல் புரியத் தொடங்கினர். பசவராஜும் வாளையுருவிக் கொண்டு, ''சாமுண்டீஸ்வரி; எனக்கு வலிமையைக் கொடு!'' என்ற ஆவேசக் குரல் விடுத்துப் பக்கத்திலிருந்த



வேற்றுக் குதிரையொன்றின் மீது தாவி ஏறினான்.

குதிரையும் போர் வெறி கொண்டு நாலு கால் பாய்ச்சலில் விரைந்து பறந்தது.

"எத்தனையோ யுத்தங்களையும் அதன் அக்கிரமமான ஆக்கிரமிப்புக்களையும் கண்டு, வெருண்டு, அமைதி கண்டு இதையின் மூலா சிரியனாகவே திகழ்ந்து விட்ட சூரியன், மேற்கு திசை நோக்கிப் பயணப் பட்டுக் கொண்டிருக்கிறான்...

ஒரு குருக்ஷேத்திரத்தை விடவா அவன் இன்னொரு யுத்தகளத்தைப் பார்வை யிடப் போகிறான்?

ஆயினும் வில்லில் ஓர் அருச்சுனனைப் போல் இப்போது வானில் ஒரு பசவராஜைப் பார்க்கிறோம் என்ற வீர சிருஷ்டியின் அற்புதத்தை ரசித்தவனும் பிரகாசக் கதிர்களைப் பூமிக்கு அனுப்பி வேடிக்கை பார்க்கிறான்...

லால்மகாலே பசவராஜ் நெருங்கி வருகிற போது...

கூட்டத்துக்கிடையே பெரிய கோஷம் கிளம்பி வான் முகட்டுக்கு எட்டி, சூரிய னையே ஒருகணம் அதிரடித்து ஸ்தம்பிக்கச் செய்கிறது...

கோஷம் எழுப்பியவர்கள் திப்புசுல்தான் ஆட்சியில் ராஜ விசுவாசம் கொண்டவர்கள்: துரோகியாக மாறிய *அப்துல் கரீமுக்கு எதிராகப் போர்க் கொடி உயர்த்தியவர்கள்!

எதிரிகள் பசவராஜைக் கண்டதும் பெரும் பீதி கண்டு மருளத் தொடங்கினர். திப்பு சுல்தானே வந்துவிட்டது போன்ற பயத்தின் எதிரொலியாய் ஒருகணம் வியர்த்துப் போயினர். ஆயினும் அப்துல் கரீமின் தோளுக்குத் தோள்களாய் விளங்கிய முக்கிய வீரத்தலைவர்கள், தமது வீரர்களுக்குக் கூக்குரலெழுப்பி உற்சாக மூட்டி முன்னேறத் தூண்டினர்.

இதனைக் கவனித்த சுபேதார் குருவய்யா — திவான் சாகிப் மீர்சாதிக்கையாட்களில் ஒருவன் — நேரே அப்துல் கரீமுக்குச் செய்தி தெரிவிக்க விரைந்தான்.

பசவராஜின் திமிர்ப் போர் நுழைவைக் கண்டதும், திப்பு சுல்தானின் ராஜ விசுவாசிகள் தங்கள் வாட்கள் இப்போது மிகுந்த கூர்மை கண்டு



---

* அப்துல் கரீம் இவ்வாறு துரோகச் சிந்தையுடன் தந்தை யார் இறந்து பட்ட செய்தியைக் கேட்டதும் ஆட்சியைப் பிடிக்கக் கலகம் விளைவித்தான்.
History of Tippu - by Hasan.

விட்டது போன்ற உணர்வுடன் உயிரைத் துரும்பாக மதித்து ஆவேசத்துடன் அவற்றை வீசி முன்னேறினர்.

ஒருபுறம் வாள் வீச்சுக்களின் ஆரவாரம்... மறுபுறம் துப்பாக்கிக் குண்டுகளின் பயங்கரச் சத்தம்...

வலக்கையில் ஏந்திய ஒற்றை வாளிலேயே தனது உயிரான வல்லமையைத் தேக்கிச் சுழற்றுகிறான் பசவராஜ்! எதிர்த்தவர்கள் தலைகளைப் பனங்காயைச் சீவுவது போலச் சீவித் தள்ளுகிறான்...

தலைகளும், கைகளும், கால்களுமாகத் துண்டிக்கப்பட்டு முண்டங்கள் நன்றிகொன்ற தன்மையின் பிண்டங்களாகத் துடிக்கின்றன.

இப்புவின் பால் ராஜ விசுவாசம் கொண்டு எதிர்த்த வீரர்கள் நிமிஷத்துக்கு நிமிஷம் முன்னேறுகிறார்கள்... அவர்களுடைய துப்பாக்கிகள் எதிரிகளைக் குறி பார்த்து வீழ்த்துகின்றன...

பசவராஜின் திடீர் நுழைவால் உள்நாட்டுக் குழப்பத்துக்கு வேறு விதமான திசை திருப்பம் கண்டு விட்டது. இதனை அறிந்து, அப்துல் கரீம் வெறி கொண்டு அலறித் துடிக்கிறான். எப்படியும் இந்தப் பசவராஜைத் தீர்த்துக் கட்ட வழிவகைகளைத் தேடுகிறான்...

ஜனானாவில் செய்தி எட்டி விடுகிறது. ஒரு விதத்தில் பெரிய கல்தானு பேகம் பக்ருன்னிஸாவுக்கு ஆறுதல். செய்தி கொண்டு வந்தவளைத் தனித்து அழைத்து ஏதோ விசாரிக்கிறாள்.. என்ன விசாரிக்கப் போகிறாள்? கூடவே ரங்கநாயகியும் வந்திருக்கிறாளா என்றுதான்.

செய்தி கொண்டு வந்தவளும் தனக்குத் தெரியாது என்று கூறியது மறு விதத்தில் பெரிய கல்தானு பேகத்துக்கு மேலும் வேதனையைத் தருகிறது. இந்த வேதனை எதைக் குறித்து இருக்க முடியும்? இந்த நிலையிலும் அவள் ரங்கநாயகியை ஒப்புக் கொண்டு ஏற்க முடியாத மூர்க்கத்தனமான பிடிவாதத்தை யல்லவோ குறிக்கிறது..

---

''என் பிறந்த நாளை வருஷா வருஷம் உலகம் பூரா கொண்டாடறதாக்கும்!''

''அப்படியா?.... அப்படீன்னா, ஆகஸ்டு 15 தானே உன் பிறந்த நாள்?''

''அது தான் இல்லே!''

''பின்னே?... ஜனவரி 26ஆம் தேதியா?''

''ஊஹூம்...அதுவும் இல்லே!''

''அப்போ...அக்டோபர் 2... கரெக்ட்தானே?''

''இல்லே''

''பின்னே என்ன தேதி? நீயே சொல்லு''

''ஏப்ரல் 1'' -ஷேக் ஸிந்தா மதார்



தனது அருமைக் காதலன் பசவராஜ் வந்து விட்டான். நாட்டின் குழப்பத்துக்குப் பரிகாரம் தேடுகிறான் என்கிற தேனினும் இனிய செய்தியைக் கேட்டு ரொம்பவும் மகிழ்ந்து போகிறாள் மஞ்சுளா தேவி. காதலனை எப்படியும் காண்போம்; தனது கனவு வீண் போகவில்லை என்று அந்த நெஞ்சம் பிரார்த்தித்துக் கொள்கிறது.

மாலை மறைந்து இருட்டு கவிழ்கிறது.

பசவராஜும் அவனுடன் சேர்ந்த ராஜவிசுவாசிகளும் ஸ்ரீரங்கநாதர் கோயிலை அடைகின்றனர். அன்றைய உள்நாட்டுக் குழப்பச் சண்டை அப்போதைக்கு அதுவரை ஓய்வு பெற்றதுபோல் அமைதி காண்கிறது.

சுற்றிலும் தீப்பந்தங்கள் ஏற்றப்படுகின்றன. கோயிலைச் சுற்றிலும் வீரர்கள் ஓய்வு கொள்கின்றனர். நகர மக்கள் அவர்களுக்கான உணவு விஷயத்தில் தங்கள் பங்கினை நன்றி உணர்வுடன் ஏற்றுச் செயல்படுகின்றனர்.

ரங்கநாயகிக்குக் கோயில் பட்டாச்சாரியார் வீட்டிலிருந்து உணவு வந்தது. அதனைப் பசவராஜுடன் பகிர்ந்து உண்டு மகிழ்கிறாள் ரங்கநாயகி. அதன் பிறகு அன்றைக்கு நடந்த போர் நிலைகள் குறித்துப் பேசினாள். எப்படியும் இந்த உள்நாட்டுக்குழப்பப்போர் அடக்கப்பட்டு விடுமா என்பதில் அவளது அக்கறை ஒரு பிரார்த்தனையே போலத் தெரிந்தது. இப்புகல்தான் மட்டும் விரைந்து வந்துவிடுவாரேயானால்...

இரவு ஒருவர் கூட உறங்காது காவல் காத்தனர். போர் நெறிக்கே அப்பாற்பட்டு ராஜத் துரோகம் செய்ய நினைத்த அப்துல்கரீம் எந்த நேரத்திலும் எப்படியாவது தாக்க முன் வரலாம் அல்லவா?

ஆனால், அவ்வாறு ஏதும் நிகழவில்லை. அமைதியாகவே காலை புலர்ந்து கொண்டிருந்தது.

நகர மக்கள், எத்தனை காலையில் சிற்றுண்டி கொண்டு வந்து தருகிறார்கள்...!

அடடா! அவர்களது அந்த உபசரணை இப்புகல்தான் மீதுள்ள கருணையையல்லவோ காட்டுகிறது!

அப்துல் கரீமை எப்படியாவது வீழ்த்திச் சிறையில் அடைக்க மாட்டார்களா என்று அவர்கள் பேசிக் கொள்வதும் பசவராஜின் காதுகளில் விழத்தான் செய்கிறது. மகா மூர்க்கனும், ஸ்திரீ லோலனும், ராஜரீகம் தெரியாதவனுமான அப்துல்கரீமை அவர்கள் மிகவும் வெறுக்கிறார்கள் என்பது அவர்களது அந்தச் செய்கையிலிருந்து புலனாகிறது. இல்லையென்றால் எத்தனை அதிகாலையில் அவர்கள் விழித்துச் செயல் பட்டிருந்தால் இத்தனை காலையில் சிற்றுண்டி படைக்க முடியும்?

சிற்றுண்டியைச் சாப்பிட்டு முடித்துக் கையைக் கூட அலம்பவில்லை.

எங்கிருந்தோ வானமே இடிந்து விழுகிற மாதிரி பெருத்த சத்தம்...

ஓ... ஹைதர் நகரிலிருந்து அப்துல்கரீமுக்கு உதவும் முகாந்திரமாக அயாஸ்கானும் கர்னல் வில்க்ஸும் படைகளுடன் புறப்பட்டு வந்து விட்டார்கள். இந்தச் செய்தி அப்துல்கரீ





நன்றி: ஸ்புட்னிக் — கே. ஆர் —

முக்கு எவ்வளவு பெருமிதத்தைத் தந்ததோ, அவ்வளவுக்குப் பசவராஜுக்குப் பேரதிர்ச்சியைத் தந்தது. இருக்கிற இந்தப் படைகளைக் கொண்டு ஹைதர் நகர் படைகளை எவ்வாறு அடக்குவது? திப்புகல்தான் இந்நேரத்தில் வந்து விடுவாரேயானால் இவர்களைத் துவம்சம் செய்து விடலாமே...

ஆ! ஸ்ரீரங்கப் பட்டினத்துக்கு நிஜமாகவே போதாத காலந்தானா? இந்த ஆட்சி அப்துல் கரீமிடம் சிக்கிய பிறகு என்னவெல்லாம் துன்பத்திலாழ்ந்து, விடுதலையடைய இருக்கிறதோ? அதற்குள் இந்த விடுதலைப் போராட்டத்தையே துவம்சம் செய்யக் காத்திருக்கும் வெள்ளைக் கும்பினியன் விட்டுவைக்க மாட்டானே!

தேசிய உணர்வின் எழுச்சியின் சுதந்திரக் கதை முதன்முதலில் சிவகங்கைச் சீமையில் தொடங்கி ஸ்ரீரங்கப்பட்டினத்துடன் முடிவடைய வேண்டியதுதானா?

மேலும் காலதாமதம் செய்வது சரியல்ல என்பதை உணர்கிறான் பசவராஜ். இந்த மூர்க்கமான படைகள் ஸ்ரீரங்கநாதர் கோயிலை முற்றுகையிட வைப்பது ரங்கநாயகிக்கு ஆபத்தை விளைவிக்கும். எனவே, காவல் வீரர்களைப் பாதுகாப்பாக அமர்த்திவிட்டு, இருக்கிற படைகளை அழைத்துச் சென்று ஒன்று வெற்றி அல்லது வீர சொர்க்கம் என்று பார்த்து விட வேண்டியதுதான்!

பசவராஜ், தனது வீரர்களை அழைத்துக் கொண்டு லால் மகாலை நோக்கிப் புறப்படுகிறான். லால் மகாலில் கலகம் ஓய்ந்தது என்று தெரிய வருகிற மறுகணத்திலேயே அப்துல்கரீம் தனது ஆட்சிப் பிரகடனத்தை முழங்கி விடுவானே! அதுவல்லவோ மிகப் பெரிய ஆபத்து! அதனை எப்படியும் நடக்க விடாது கவனித்துக் கொள்வதில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அதற்குள் திப்புகல்தான் வந்து விட மாட்டாரா?

"தாயே! சாமுண்டேஸ்வரி! உனக்கு மதம் ஒன்றாக இருக்கிறதோ இல்லையோ? மானுடம் ஒன்று! எனது நண்பன் திப்புகல்தான் மானுடநேசனோ சொரூபன்! அவன் ஒரு மானுஷ்யோபநிஷத்! அவனது ஆட்சியைக் காப்பாயாக!" என்று பிரார்த்தனை புரிந்த வண்ணம் போராட்டத்தில் குதிக்கிறான் பசவராஜ்.

ஹைதர் நகர் வீரர்களுடன் அப்துல்கரீமின் ஆதரவு வீரர்களும் கலந்து கொண்டு திப்புவின் ராஜுவிசுவாசி வீரர்களை விழி பிதுங்க நொறுக்குகின்றனர். அப்படியும் பசவராஜ், தனது சோர்வற்ற வீரத்தால் எதிரிகள் மருளுமளவுக்குப் பாய்ந்து வாளைச் சுழற்றுகிறான். அப்போது...

எங்கிருந்தோ வந்த இரண்டு துப்பாக்கிக் குண்டுகள் அவன் மீது பாய்வதற்குப் பதிலாக அவனது குதிரையின் வயிற்றில் புகுந்து வெளியேறுகின்றன. அடுத்த விநாடியே குதிரை துள்ளிக் கனைத்துத் தரையில் சாய்கிறது. ஒருகணம் கீழே விழுந்த பசவராஜ், மறுகணம் சுதாரித்து எழுந்து கொள்கிறான். இடுப்பிலிருந்த மற்றொரு வாளுக்கு இப்போது வேலை தர வேண்டியதாய் விட்டது. அதனை உருவிக் கொண்டு தனக்கே உரிய இரட்டை வாள்போர் முறையைக் கையாண்டு முன்னேறுகிறான்.

அத்தருணத்தில்...

"நவாப் — திப்புகல்தான் ஜிந்தாபாத்!" என்ற குரல்கள் சிலரைக் கிறங்கச் செய்கின்றன. பலரைக் கிடுகிடுக்கச் செய்கின்றன.

ஆ! தொலைவில் திப்புகல்தானும் அவனது படைகளும் வெறி கொண்ட வேகத்துடன் வாட்களை ஏந்தி, புழுதிப் படலத்தைக் கிளப்பிய வண்ணம் ஒரு புயலே வருவது போன்ற காட்சி!

"குமார கல்தான்!" என்ற சந்தம் கொண்டவனைப் போலக் கூச்சலிட்டு வரவேற்கிறான் பசவராஜ்! அவனது உடலில் புதிய தெம்பு; உணர்வில் ஒரு புதிய உத்வேகம்; உயிரில் இன்னோர் உயிர்...

லால் மகாலின் உப்பரிகையில் இருந்து இதைக் கவனித்த அப்துல்கரீம் சர்வ நாடியும் தளர்ந்து, ஜீவனற்றுப் போய்விட்ட ஜடம் போல் ஸ்தம்பித்து வாய் பிளந்து நிற்கிறான்...

(அடுத்த இதழில் முடியும்.)

# இவன் கிழக்கு: அவள் மேற்கு!

## 'அய்க்கண்'

லண்டனிலிருந்து வந்திருந்த டாக்டர் வித்யாவைச் சூழ்ந்து கொண்டு எல்லோரும் 'டெஸ்ட் – ட்யூப் பேபி'யைப் பற்றித்தான் மாய்ந்து மாய்ந்து கேட்டார்கள். அவளும் வாய் வலிக்காமல், மருத்துவ உலகின் புரட்சிகரமான சாதனையைப் பற்றி, முடிந்தவரை விளக்கமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் கமலா, அவளுடைய பேச்சையும் நடத்தையையும் ஆச்சரியத்துடன் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தாள்.

''...கணவனுடைய ஸ்பர்ம், மனைவியின் கரு முட்டை இரண்டையும் முதலில் ஒரு டெஸ்ட் – ட்யூபில் இணைத்துக் கருவாக்கி, அந்த 'எம்ப்ரியோ'வை மனைவியின் கருப்பைக்குள் செலுத்திடறதுதான், இப்போது நிகழ்த்தியிருக்கிற சாதனை. இதன்மூலம் பல பெண்களின் மலட்டுத் தன்மையைத் தீர்த்துவிட முடியும்... இப்பொழுது 'ப்ளட் – பாங்க்' 'ஐ பாங்க்' இருக்கிற மாதிரி, எதிர்காலத்திலே 'ஸெமன் – பாங்க்' ஏற்படும். உலகத்தின் சிறந்த அறிஞர்கள், விஞ்ஞானிகள். எழுத்தாளர்கள் வீரர்கள் முதலியோரின் விந்துவை அந்த பாங்கில் சேகரித்து வைக்கலாம். தம்பதிகள் அங்கிருந்து தேவையான உயிரணுக்களை வாங்கி, விருப்பமான இயல்புடைய குழந்தையைப் பெற்றுக் கொள்ளலாம்...''

என்று வித்யா விளக்கிச் சொன்னபோது, அந்தக் கூட்டத்தில் இருந்த பெண்கள் 'சீச்சீ! கர்மம்...' என்று உதட்டுக்குள் முணுமுணுத்தவாறு முகம் சுளித்ததைப் பார்த்து. அவள் மனத்துக்குள் சிரித்துக் கொண்டாள்.

''அதெல்லாம் இங்கே நடக்காது, வித்யா! கிழக்கு. கிழக்குதான்: மேற்கு மேற்குத்தான்!... இங்கே, சினிமாவிலே கூட, ஆன்ட்டி ஸெண்டிமெண்டுக்கு வரவேற்பு கிடைக்காது!'' என்று சிரித்தான் எதிரே இருந்த விசுவம்! வித்யாவின் மாமன் மகனான அவன், பி. ஏ. படித்து விட்டு, சினிமாத் துறையில் அசிஸ்டெண்ட் டைரக்டராக இருக்கிறான்...

கிட்டத்தட்ட பத்து ஆண்டுகளுக்கு முன்பு, டாக்டர் வித்யா மேற்படிப்புக்காக லண்டன் சென்றவள், இப்போதுதான் திரும்பி வந்திருக்கிறாள்.

சுற்றியிருந்தவர்களெல்லாம் போன பிறகு, தன்னைப் பார்க்க வந்திருந்த பால்ய சிநேகிதியின் கைகளை இறுகப் பிடித்து, தன் கைகளுக்குள் வைத்துக் கொண்டாள் வித்யா.

''என்னடி கமல்? நீ மட்டும் வந்திருக்கே? உன் 'ஹப்பி' எங்கே? குழந்தைகளெல்லாம் எங்கே? ஸ்கூலுக்குப் போயிட்டாங்களா?'' என்று விசாரித்தாள் அவள்.

''இல்லேடி... என் குழந்தை ஆபீஸுக்குப் போயிருக்கு!'' என்று சிரித்தாள் கமலா. அந்தச் சிரிப்பின் முழுஒளியை ஏதோ ஒரு சோகம், கிரகணமாய் மறைத்து விழுங்குவதை டாக்டர் கவனித்தாள்:

''என்னடி சொல்றே?''

''எங்கவீட்டிலே எனக்கு ஓர் ஆண் குழந்தை அது என் கணவர் – அவருக்கு ஒரு பெண் குழந்தை: அது நான்!''... என்ற கமலாவின் முகத்திலே புன்னகை நீடித்து நிற்க முயற்சி செய்தது.

''அப்போ, உங்களுக்கு இன்னும் குழந்தைகள் இல்லையா?... கல்யாணமாகிப் பத்து வருஷத்துக்கு மேலே ஆச்சே?... ஏண்டி, இத்தனை வருஷமாய், குழந்தை பிறக்கலியேன்னு, நீங்க மெடிகல் 'செக் – அப்' செஞ்சுக்கலியா?'' என்று ஆத்திரமாகக் கேட்டாள் வித்யா.

அந்தச் சமயத்தில் அவள் அம்மா காமாட்சி உள்ளே வந்தாள்.

''அதெல்லாம் கமலா பார்த்திட்டா. அவ புருஷன் கிட்டே ஏதும் குறையில்லை. கமலா கருப்பையிலேதான் ஏதோ கோளாறுன்னு டாக்டர் சொல்லிட்டாராம்... இவ குறையை டாக்டராலேயும் தீர்க்க முடியலே: கடவுளும் கண் திறக்கலே. அதனாலே, பாவம், இவ பத்து வருஷமாய் வயிறு திறக்காம இருக்கா... ஏண்டி வித்யா, நீதான் லண்டனிலே ஏதேதோ ஆராய்ச்சி, அது இதுன்னு படிச்சிட்டு வந்திருக்கியே, நீயாவது இவளைப் பார்த்து வைத்தியம் பண்ணி, சரிப்படுத்தக் கூடாதா?'' என்று கேட்டாள் காமாட்சி.

''நிச்சயமாய்... நான் லண்டன் திரும்புறதுக்குள்ளே இவளை ஒரு தாயாக்கிட்டுப் போறேன், பாரும்மா!'' என்றாள் வித்யா.

''டாக்டர்கள் உயிரைக் காப்பாத்தலாம்: உயிரைப் படைக்க முடியாதம்மா!''... என்று சிரித்தாள் கமலா.

மறுநாள் – கமலா அங்கே வந்தபோது, வித்யா மருத்துவ சோதனைக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருப்பதைப் பார்த்துத் திகைத்துப் போனாள்.




''என்னங்க! குதிரைப் பந்தயத்தில் ஒரு குதிரையை மட்டும் பத்தடி முன்னால் நிக்க வைக்கிறாங்க?''
''அந்தக் குதிரையின் சொந்தக்காரர் பின்தங்கிய வகுப்பினராம்!''
வி.பி. ரங்கராஜன்

''நோ... நான் மெடிக்கல் செக்—அப் செய்து கொள்ள விரும்பலே, வித்யா!'' என்று மறுத்தாள் கமலா.

''கமல்! என் சிநேகிதி மலடாக இருக்கிறப்போ, நான் ஒரு ஸ்பெஷலிஸ்ட், லண்டனிலே ரிஸர்ச் பண்ணினவள்னு சொல்லிக்கிறதிலே என்னடி அர்த்தமிருக்கு?'' என்று உளம் கசிந்து கேட்டாள் டாக்டர் வித்யா.

தோழியின் அன்பிலே நெகிழ்ந்து போனாள் கமலா.

''வித்யா!... உன் கிட்டே உண்மையைச் சொல்லிடறேன். முன்னாலே செஞ்சுக்கிட்ட மெடிக்கல் செக்—அப்பிலே, நான் மலடின்னு டாக்டர் சொல்லலே. ஆனால் ... அவர்...'' என்று தயங்கினாள் கமலா. பிறகு, முகத்தை மூடிக் கொண்டு குலுங்கி அழுதாள். அவளைப் பரிவோடு அணைத்துக் கொண்டாள் வித்யா!

''கமல்! இதுக்கு நீ ஏன்டி அழறே?... இதுவரை நீ அழுதது போதும். இனிமேலாவது ஆக வேண்டியதைப் பார்... அவரை விவாகரத்து செஞ்சிட்டு —'' என்றதும் பதறிப்போய்க் குறுக்கிட்டாள் கமலா.

''சீ! என்னடி பேசறே! அவரை விவாகரத்து செய்யறதாவது?—''

''பின்னே என்ன, காலம் பூராவும் அவரைக் கட்டிக்கிட்டு அழணும்னு சொல்றியா?...''

''அவரை விட்டுப் பிரியறதுக்கு இப்படி ஒரு காரணம் கூட சொல்ல வேண்டாம், வித்யா! 'உங்களை விட்டுப் பிரிஞ்சு போனால் தான் எனக்குச் சந்தோஷம்'னு சொன்னாலே போதும் — அவர் சம்மதிச்சுடுவார்; அவ்வளவு நல்ல குணம் அவருக்கு...''

''அதனாலே?—''

''கேவலம், குழந்தை வேணும்கிறதுக்காக, அந்த நல்ல கணவரை என்னாலே இழக்க முடியாது, வித்யா!... அந்த நல்லவரைப் பத்தி, யாரும் கேவலமாய்ப் பேசக் கூடாது. 'ஆண்மையில்லாதவர்னு சொல்லக் கூடாதுன்னு'தான், மலடி என்கிற குறையை நானாக என்மேலே சுமத்திக் கிட்டிருக்கேன், தெரியுமா?''

''சபாஷ்!.. ஏ க்ளாஸ் பத்தினி நீ!... அவருக்காக உன் மனசை வருத்திக்கிட்டு, மலடிங்கிற வீண்பழியைச் சுமக்கணுமா நீ?''

''ஏன் வித்யா, இந்த நிலை வேறு விதமா இருக்குமானால் — அவர் என்னை விவாகரத்து செய்ய நினைச்சார்னு, எனக்கு எவ்வளவு வருத்தமாய் இருக்கும். யோசிச்சுப் பார்!'' என்று கேட்டாள் கமலா.

''எஸ்... நானும் அதையேதான் கேட்கிறேன் — நீ உண்மையிலேயே மலடியாயிருந்தா அவர் உன்னை விவாகரத்து செய்யமாட்டார்னு என்ன நிச்சயம்?'' என்று திருப்பி மடக்கினாள் வித்யா.

''நிச்சயமாய் அப்படிச் செய்ய மாட்டார், என்று. என் கணவர் ராமபிரான் மாதிரி. என்னைத் தவிர இன்னொருத்தியை மனசாலே கூட நினைச்சுப் பார்க்க மாட்டார்.''

வித்யாவுக்கு எரிச்சலாக இருந்தது அவள் பேச்சு.

''அருமையான டயலாக்!... நம்ம விசுவும் இருக்கிறாரே, அவர்கிட்டே உன் கதையைச் சொல்லு. ஸென்டிமென்டலாய், மெலோடிராமாடிக்காய் 'கற்புக்கரசி கமலா'ன்னு ஒரு சினிமா எடுத்திடுவான்! தமிழ்நாட்டிலே ஓஹோன்னு ஓடும்!...'' என்று கேலியாகச் சிரித்தாள் அவள். இருந்தாலும் அந்த விஷயத்தை அத்துடன் விட்டுவிடவில்லை அந்தத் தோழி. தன் அப்பா அம்மா மூலமும், கமலாவுடன் பேசி, அவளை விவாகரத்துக்குச் சம்மதிக்க வைக்க முயற்சி செய்தாள் வித்யா.

அடுத்தநாள், அந்த வீட்டிலே ஒரு பரபரப்பான பட்டி மன்றமே நடந்தது! எல்லாரும் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும், தனியாளாய் நின்று கமலா மறுத்து விட்டாள்.

இந்த விஷயம், அந்த வீட்டு வேலைக்காரி மூலம், பக்கத்து வீட்டுக்குப் பரவி, அங்கு தற்செயலாக வந்திருந்த பார்வதியம்மாள் காதில் விழுந்துவிட்டது.

பார்வதியம்மாள், மாம்பலத்தில் கமலா குடியிருக்கும் காலனியில் உள்ள எட்டுக் குடும்பங்களிலே, சீனியர் குடும்பத் தலைவி. அவளுக்கு 'டிரான்ஸ்மிட்டர்' என்று ஒரு பட்டப் பெயர் உண்டு. ஒன்றுமில்லாத சாதாரண விஷயத்திற்குக் காதும் மூக்கும் கண்ணும் வைத்து, சுவையான வதந்தியாகப் பரப்பி விடுவாள்! இதுமாதிரி ஒரு ரகசிய விஷயம் கிடைத்தால் விடுவாளா?

தன்னுடைய தியாக உள்ளத்தைப் பாராட்ட வேண்டியவர்கள் அதை விட்டு விட்டு ராமநாதனை 'ஆண்மையற்றவன்' என்று கேவலமாய்ப் பேசி விமர்சிப்பதைக் கேட்டுத் திகைத்தாள் கமலா.

ஒரு வாரம் கழித்து — ராமநாதன் வழக்கம் போல் திருச்சிக்கு ஆபீஸ் அலுவலாக 'டூர்' போயிருந்தான். அவன் ஆடிட் செக்‌ஷனில் இருந்ததால், அடிக்கடி மதுரை, திருச்சி, கோவை முதலிய ஊர்களுக்குப் போவதுண்டு.

மாலைநேரத்தில் ஓர் இளம்பெண், அந்தக் காலனியில் நுழைந்து 'மிஸ்டர் ராமநாதன் வீடு எது?' என்று விசாரித்தாள். 'கேட்' அருகில் நின்ற பார்வதியம்மாள், கமலா வீட்டைக் காட்டினாள்.

# அதிக நிலங்கள் சாகுபடிக்குத் தயார்!

ஆந்திரப் பிரதேசத்தில் திட்டப்படி வரையறுக்கப்பட்டுள்ள நீர்ப்பாசனத் திட்டங்களில் கிடைத்த பங்கு விகிதாசாரப்படி அதிக அளவு நீர்ப்பாசன வளத்தைப் பெருக்குவது சாத்தியமாகியிருக்கிறது.

ஷெட்யூல்ட் பகுதிகளில் ஆறு மத்தியதர நீர்ப்பாசனத் திட்டங்கள் 21.68 கோடி ரூபாய் மதிப்பீட்டுச் செலவில் தொடங்கப்பட்டுள்ளன.

சிறு அளவு நீர்ப்பாசனத் திட்டத்தில் நீர்ப்பாசன வளம் 2.20 ஹெக்டர் நிலப் பரப்புக்குக் கிடைப்பதில் 1.76 ஹெக்டர் நிலம் இப்பொழுது சாத்தியமாகி உள்ளது.

1979.80ம் ஆண்டில் 680.26 லட்சம் மதிப்பீட்டுத் தொகையில் 6350 ஹெக்டர் அதிக அளவு நீர்ப்பாசன வளம் கிடைப்பதற்குத் திட்டமிடப்பட்டுள்ளது.

D.G., I & P R 44

கதவைத் திறந்து வெளியே வந்த கமலா, ''நீங்க யார்? யாரைப் பார்க்கணும்?'' என்று அந்த இளம்பெண்ணிடம் கேட்டாள்.

தன் நீண்ட கரிய விழிகளை அகல விரித்தபடி ''நீங்க யார்?'' என்று திருப்பிக் கேட்டாள் அந்த அழகி.

''நான் கமலா. அவருடைய மனைவி...'' என்றதும் திடுக்கிட்டு நின்றாள் அந்த மங்கை.

''ராமநாதன் மனைவியா?... அட பாவி! நல்லா ஏமாத்திட்டானே? எனக்குக் கல்யாணம் ஆகலேன்னு பொய் சொல்லி என்னை ஏமாத்தி, இப்படி நடுத் தெருவிலே கர்ப்பிணியாய் நிறுத்திட்டானே, நாசகாரப் பாவி!'' என்று ஓங்கிக் குரலெடுத்து அழுதுவிட்டாள்.

உடனே கூட்டம் கூடிவிட்டது. சட்டென்று பார்வதியம்மாள் முன்னால் வந்து ''சரி. சரி.. ஏன் இப்படி வெளியிலே நின்னு கத்துறே? வா... உள்ளே போய்ப் பேசுவோம்..'' என்று அவளை இழுத்துக் கொண்டு, கமலா வீட்டுக்குள் நுழைந்தாள். அவள் ஒலிபரப்புக்கு ஒரு நல்ல விஷயம் கிடைக்கும் போலிருக்கே!..

'ஐயோ, ஏமாந்திட்டேனே!... பாவி! ஏமாத்திட்டானே!' என்ற பல்லவிகளுக்கிடையே அந்தப் பெண் தன் கதையைச் சொன்னாள்:

அவள் மதுரையிலே ஒரு ஆபீஸில் வேலை பார்க்கிறவளாம். ராமநாதனுக்கும் அவளுக்கும் நாலைந்து வருஷமாய்த் தொடர்பு உண்டாம். அடிக்கடி அவளைப் பார்க்க அவன் மதுரைக்கு வருவானாம். கணவன் மனைவிபோல் குடும்பம் நடத்தினாலும், கல்யாணத்தை மட்டும் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தானாம்... இப்போது அவள் இரண்டு மாதக் கர்ப்பமாம்...

''அதெப்படி, அவருக்குக் குழந்தையே உண்டாகாதுன்னு இங்கே டாக்டர் சொல்லியிருக்காரே?'' என்று கேட்டாள் பார்வதி.

''அட பாவி! அப்படி ஒரு பொய்யை வேறு சொல்லியிருக்கானா?... 'இப்போ குழந்தை வேண்டாம். கல்யாணத்துக்குப் பிறகு பெத்துக்கலாம் கருச்சிதைவு செய்துக்கன்'னு சொன்னான். நான் மாட்டேன்னுட்டேன். அதுதான், மனுஷன் மதுரைப் பக்கமே இப்போ வரலே...''

கமலா திகைத்துப் போய் ஒன்றும் பேசாமல் நின்றாள். பார்வதியம்மாள் அவளை உற்றுப் பார்த்தாள்.

'தன்னுடைய மலடித் தனத்தை மறைப்பதற்காக, கணவன் மேல் பொய்ப்பழியைச் சுமத்தியிருக்கிறாள் கமலா! அதை உண்மை என்று டாக்டர் வித்யாவும் குடும்பத்தாரும் நம்பிவிட்டார்கள்' என்று யூகித்துக் கொண்டாள் பார்வதி.

அந்தச் சமயத்தில் — வித்யா தற்செயலாக, தோழியைப் பார்க்க, அங்கே வந்தாள். நடந்ததை அறிந்து திகைத்த அவள், சட்டென்று பிரச்னையைத் தீர்க்க முயன்றாள். மதுரைப் பெண்ணைத் தனியே கூப்பிட்டுப் பேசினாள்:

''மிஸ்டர் ராமநாதனுக்கு ஏற்கெனவே கல்யாணமாகி விட்டது. இரண்டாம் கல்யாணத்துக்கு, கமலா ஒப்புக் கொள்ள மாட்டாள். அதனாலே நீ நஷ்ட ஈடாக ஏதாவது பணம் வாங்கிக் கொண்டு, விலகிப் போய் விடு...'' என்று நயமாகவும் பயமாகவும் எடுத்துச் சொல்லி, அவளைச் சம்மதிக்க வைத்து விட்டாள்.



''என்ன 'பாடுனாலும் அவரால் முன்னுக்கு வர முடியலே!''

''ஏன்?''

''அவர்தான் சினிமாப் பிரபல 'பின்னணி'ப் பாடகராக இருக்காரே!''

- வெ. சீதாராமன்

''மிஸ்டர் ராமநாதன் திருச்சியிலிருந்து வந்ததும், உனக்குத் தர வேண்டிய பணத்தை அனுப்பி வைக்கிறோம். ... இந்தா நூறு ரூபாய், இப்போ வழிச் செலவுக்கு வைச்சுக்கிட்டு ஊருக்குப் போ...'' என்று அவளை அனுப்பி வைத்தாள்.

அவள் போனதும், டிரான்ஸ்மிட்டரும் தன் வேலையைச் செய்ய வெளியேறியது!

வித்யா கமலாவைப் பார்த்து ஏகத்தாளமாகச் சிரித்தாள்:

''என்னடி, கமல், என்னமோ 'என் புருஷன் ராமபிரான் மாதிரி. என்னைத் தவிர வேறொருத்தியை ஏறெடுத்தும் பார்க்க மாட்டார்'னு சொன்னியே, என்ன ஆச்சு?''

கமலா, நிமிர்ந்து தோழியைப் பார்த்தாள்.

''ஆமாம். இப்போதும் சொல்கிறேன்— அவர் அப்படிப்பட்ட ஜென்டில்மன்தான்!''

''அப்படின்னா, இப்போ வந்த மதுரைக்காரி?''

''அவள் மதுரை இல்லே. கோடம்பாக்கத்து எக்ஸ்ட்ரா நடிகை... இப்போ நடந்ததெல்லாம் ஒரு நாடகம். இதுக்கு, கதை, வசனம், டைரக்ஷன்: விகலம் — தயாரிப்பாளர்: நான்.''

வித்யா திடுக்கிட்டு அவளைப் பார்த்தாள்.

''வித்யா! மலடி என்கிற கேவலத்தை என்னாலே தாங்கிக்க முடியும். ஆனால் அந்த அவமானம் அவருக்கு ஏற்படறதை நான் தாங்கிக்க முடியாது. அதனாலேதான் நம்ம விகலத்துகிட்டே சொல்லி, இந்த நாடகத்துக்கு ஏற்பாடு பண்ணினேன்.. வித்யா! என் கணவர், ஒழுக்கம் இல்லாதவர்னு பேர் வாங்கறது கேவலம்தான். ஆனால் அதைவிட, ஆண்மை இல்லாதவர்னு கேவலமாய்ப் பேசப்படறது, ஓர் ஆணுக்கு ரொம்பக் கேவலம், இல்லையா? அந்தக் கேவலம், என் கணவருக்கு ஏற்படக் கூடாது...'' என்று மெலிந்த குரலில் சொன்னாள் கமலா.

டாக்டர் வித்யா, எதுவும் பேசத் தோன்றாமல், வியப்பால் திகைத்து நின்றாள்!

# கனவா-நிஜமா? 15

வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்










அப்போது அங்கு வந்த வேங்கை மார்பன் ஆத்திரத்துடன் கத்துகிறான்.
பொய்... பொய்! என் அண்ணா இப்படி எதுவும் அறிவிக்கவில்லை. சிந்தித்து ஒரு முடிவோடு வருவதாகப் போனவர் இன்னும் நாடு திரும்பவே இல்லை.


முண்டன் அருகிலிருந்த காவல் வீரனிடம் கிசுகிசுத்தான்....
அவனை அடித்து வீழ்த்தி அவன் கூச்சலை அடக்கு. உனக்குப் பதவி உயர்வு தரப்படும்....
அப்படியே செய்கிறேன்.


வேங்கை மார்பனும் மற்றும் விசுவாசமிக்க பலரும் பாதாளச் சிறைக்குத் தள்ளிக்கொண்டு போகப்பட்டார்கள். தந்தவக்ரனின் ஆட்களான சண்டனும் முண்டனும் மக்கள் பிரதிநிதிகளைத் தங்கள் வலைக்குள் விழ வைத்து விட்டார்கள்.
புரட்சிக் குரல் எழுப்பிப் பயனில்லை
ஆ...ஹ்...ஹ்...!


திட்டமிட்டுச் செயல்பட்டதால் புரட்சிக்காரர்கள் வளைத்துப் பிடிக்கப்பட்டார்கள். எங்கிருந்தோ வந்த அந்நியனுக்கு முடிசூட்டி மன்னனாக்கித் தாங்களே நாட்டையாளத் தீர்மானித்தார்கள் சண்டன், முண்டன், தளபதி தந்தவக்ரன் மூவரும்.
மக்கள் பிரதிநிதிகளின் விருப்பப்படியும் நம் மூதாதையரின் நம்பிக்கைப்படியும், மாயப்பாறையைப் பிளந்த அநாமதேயருக்கு இந்த மணி மகுடத்தை அணிவித்து மாயாபுரியின் மன்னராக்குகிறேன்.


முடிசூட்டு விழாவிற்குப் பிறகு முண்டன் புதிய மன்னரைச் சந்திக்கிறான்.
மக்களாலோ, பிரபுக்களாலோ தொல்லை ஏதும் வராது. ஆனால் பழைய அரச குடும்பத்தினராலும் அவர் தம்பியாலும் தொல்லைகள் ஏற்படும். ஆகவே அவர்களைச் சிறையில் தள்ளிக் கண்காணிக்கும்படி நீங்கள் உத்தரவாக இதில் கையொப்பமிடுங்கள்.
தொடரும்

# ஃபாரின் மாப்பிள்ளை!

ஸட்சுமிராஜரத்னம்

அது அயல் நாட்டுத் தொடர்பு உடைய வங்கி. நிர்மலா போன்ற சில பெண் ஊழியர்கள் அங்கும், இங்கும் போய் வந்தார்கள். தேவதைகள் பறப்பது போல இருந்தது அவர்கள் நடந்து சென்ற அழகு. அவளைத் தாண்டிச் சென்ற வல்லி ''குட்மார்னிங் நிம்மா'' என்று சொல்லிப் போனாள்.

பேனாவை எடுக்கக் கைப்பையைத் திறந்தாள். கடிதம் கையில் நிரடியது. காலையிலிருந்து நாலைந்து தடவைகள் படித்தாகி விட்டது. அவள் மனம் வருந்தக் கூடாது என்பதற்காகவே அம்மாவும், அப்பாவும் அதைக் காட்டாமல் மறைத்திருக்க வேண்டும். ஆனால் அது அவள் கையில் சிக்கி விட்டது.

போன வாரம் அவளைப் பெண் பார்த்து விட்டுப் போன பையன் தான் எழுதியிருக்கிறான். கடிதம் வந்து நான்கைந்து நாளாகி விட்டது. போன வாரம் வந்தவன் — ரஞ்சன் —மாமி வழி உறவு. இங்கிலாந்தில் இருந்தான். பெண்ணைப் பிடித்து விட்டால் உடனே திருமணம். கூடவே இங்கிலாந்துக்குப் போக வேண்டும் என்று கூறினானாம்.

பிடிக்கிறது. இன்னும் மூன்று மாதங்களில் கனடா போகிறேன். அதற்குள் பெண் பார்த்து, நிச்சயம் செய்து, கல்யாணத்தை வைத்துக் கொள்ள வேண்டும்.''

சொன்னது போலவே பெண் பார்க்க வந்தவன், அங்கேயே சம்மதத்தையும் கொடுத்தான். ஆனால் அம்மா தான் சம்மதிக்கவில்லை. ''ஃபாரின் மாப்பிள்ளை என் பெண்ணுக்கு வேண்டாம்'' என்று கூறி விட்டாள்.

அப்பா எவ்வளவோ சொல்லிப் பார்த்தார். பலனில்லை.

அன்று போன ரவியை நிர்மலா அதற்குப் பிறகு பார்க்கவே இல்லை. அவன் அவளிடம் போகும் பொழுது சொல்லிக் கொள்ளவும் இல்லை. கடிதமாவது வரும் என்று எதிர் பார்த்தாள். அதுவும் வரவில்லை.

இதற்குப் பிறகு எத்தனையோ வரன்கள். கார், கையில் ரொக்கம், நகைகள் — எதுவுமே சடாகவில்லை. அம்மா தான் சலித்துப் போனாள். அந்தச் சலிப்பும், களைப்பும்தான் மீண்டும் ஒரு ஃபாரின் மாப்பிள்ளையைப் பெண் பார்க்க வரவேற்றது.

ரஞ்சன் ஃபாரின் மாப்பிள்ளை. அவன் சிம்பிளாகவே டிரஸ் பண்ணிக் கொண்டான். அழகின்மை மறைந்து, கவர்ச்சி சற்று தூக்கலாகவே இருக்கும்படி அமைந்த தோற்றம்... ஃபாரின் மாப்பிள்ளை என்பதால் அம்மாவின் முகத்தில் மட்டும் சற்றுப் பொலிவு இழந்து மங்கிய உணர்வுகள் தேங்கி இருந்தது.

இரண்டாண்டுகளுக்கு முன்பு —

அவள் ஜெர்மன் வகுப்பில் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தாள். அங்கு தான் ரவியைப் பார்த்தாள். இருவருக்குமே அந்த மொழியின் மீது ஏற்பட்ட நாட்டம் போட்டியைக் கொடுத்தது. அதுவே நட்பாகக் கனிந்தது.

அந்தக் கோர்ஸும் முடிந்து விட்டது. வெளியிட்டரி ஃபங்ஷன். அன்று தான் அவன் மனத்தைப் புரிந்து கொண்டாள் நிர்மலா.

''நீங்கள் ராஜகுமாரனைப் போல் ஜம்மென்று இருக்கிறீர்கள். எனக்கு என்ன பதிலைச் சொல்வது என்றே புரியவில்லை.''

''எல்லாவற்றையும் சொல்லிப் புரிய வைக்க முடியாது நிம்மா. உன்னை எனக்குப்

இவருக்குப் பதில் ரவியையே ஏற்றுக் கொண்டால்? அவருடைய விலாசம் எதுவுமே தெரியவில்லையே என்று கலங்கினாள் நிர்மலா.

குறிப்பிட்ட நேரத்தில் ரஞ்சன் வந்து விட்டான். கலகலப்பாகப் பேசினான்.

அவள் ரஞ்சன் முன்பு நின்றாள். ''உட்காரலாமே மிஸ் நிர்மலா.''

அவள் அவனுக்கு எதிர் சோபாவில் உட்கார்ந்து கொண்டாள். அவள் படித்த கல்லூரி, இன்டோர், அவுட் டோர் கேம்ஸ், அவள் படித்த ஜெர்மன் மொழி பற்றி — இங்கு ரவி நினைவில் வந்து விட்டுப் போனான். அவனுக்கு லைட் மியூசிக் பிடிக்குமா, இல்லை, கர்னாடிக் மியூஸிக்கா?

—இப்படிப் பலப்பல பேச்சில் ஓடின. 'ஓ... வாழ்க்கை பள்ளிக்குக் கூட இத்தகைய தேர்வுகள் உண்டா, என்ன?' வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டாள்.

அடுத்த சில நிமிடங்களில் அவன் தன் மனிதர்களிடம் பேசிச் சம்மதத்தைச் சொல்லி விட்டான். உடனே வீட்டில் மங்களகரமான ஆரவாரங்களும், சிரிப்புக்களும், அவர்களை



இன்ஸ்பெக்டர்: உன் வீடு எங்கே இருக்கு?
திருடன் 1: அவன் வீட்டுக்குப் பக்கத்திலே.
இன்ஸ்பெக்டர்: டேய் உன் வீடு எங்கே இருக்கு?
திருடன் 2: ஊர்லே இருக்கிற வீடுங்க எல்லாம் என் வீடு மாதிரிதானுங்களே!

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

இணைத்துக் கேலிகளும் எழுந்தன. அம்மா க்ஷணத்தில் துயர் தீர்க்கும் தணிகாசலனை வேண்டிக் கொண்டாள்.

''கல்யாணம் திருத்தணியில் வைத்துக் கொள்வதாகப் பிரார்த்தனை'' என்று கூறினான், ரஞ்சன் வீட்டாரிடம்.

''அதற்கென்ன இங்கே க்ராண்டா ஒரு ரிஸப்ஷன் கொடுத்துட்டாப் போச்சு'' என்றார்கள்.

'நிம்மா, ஸீ யூ லேட்டர்'' அவளிடம் விடை பெற்றுக் கொண்டான் ரஞ்சன்.

அப்படிப்பட்டவன்தான் மறுத்துக் கடிதம் போட்டிருக்கிறான்.

ரெஸ்பெக்டட் ஸார்,

வணக்கம் பல. முதலில் தங்களிடம் மன்னிப்புக் கேட்கிறேன். தங்களிடம் நேரில் கல்யாணத்திற்குச் சம்மதித்ததைத் தயவு செய்து மாற்றிக் கொள்ளுங்கள். கல்யாண ஏற்பாட்டை நிறுத்தி என்னைப் பெரிய மனசு பண்ணி மன்னிக்கவும். அன்புடன்,

ரஞ்சன்.

காலையில் முதலில் கடிதத்தைப் படித்ததும் பலவித உணர்ச்சல்கள் புரண்டு குழம்பின. கற்பனைக் கோட்டைகள் தகர்ந்து பொடிப் பொடியாகி விட்டன. ரவி, ரஞ்சன் — இன்னும் எத்தனை பேர்களோ? நினைக்க நினைத்தால் அதன் கனம் இறுகுகிறது. இந்த ஆண்களுக்குத்தான் எத்தனை வஞ்சகம்? ஒப்புக் கொண்ட பின்பு வார்த்தை மாறுவதென்றால்? அவன் மனம் மாறுவதற்குக் காரணம் தன்னுடைய அழகின்மைதான் என்று அவள் தீர்மானித்துப் பொருமினாள்.

''மேடம், எங்கேயோ யோசனையா இருக்கிறீர்கள். ஸாரி, உங்களுக்குத் தொந்தரவு தருகிறேன். என் டோக்கன் வந்து விட்டதா?''

அவள் அவசர அவசரமாகக் கடிதத்தை மடித்து அழகுப் பையில் போட்டுக் கொண்டாள். மரத் தடுப்பின் சிறு சதுர இடுக்கில் ரசீதுகள் டோக்கன்கள் வந்து விழுந்திருந்தன. எல்லாவற்றையும் எடுத்துப் பார்த்தாள்.

''டோக்கன் நம்பர் ஸிக்ஸ்டீன்.''

''ஸ்வீட் ஸிக்ஸ்டீன்'' என்றவாறே குறும்புப் புன்னகையுடன் அவள் முன்பு ரவி நின்றிருந்தான். கடிதத்தின் நினைவிழப்பில் அவனைக் கவனிக்கவில்லை. இடையில் செருகிய கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டாள்.

''என் டோக்கன் நம்பர்தான் ஸிக்ஸ்டீன்'' என்று ரவி மீண்டும் சிரித்தான்.

'ரவி' — மனம் தவித்து அடங்கியது. அவனுடன் கழித்த ஜெர்மன் வகுப்புக்கள், போட்டி போட்டுப் படித்த பாடங்கள், மதிப்பெண்கள்! அவனை விடக் கம்மியானால் கேலி செய்து அழவைத்துவிடுவானே! அவனை புன்னகை மாறாமல் பார்த்தாள்.

''ஸாரி, என்னை அடையாளம் தெரியவில்லை போலிருக்கே?''

'உங்களை எனக்கு அடையாளம் தெரியவில்லை என்றால் வேறு யாரைத்தான் தெரியும்?' பேசமுடியாமல் தொண்டை அடைத்தது. ''ஸாரி, சரியாய்க் கவனிக்கவில்லை.'' இதழ்களைக் கடித்துக் கொண்டாள்.

''நலம்தானே? அப்பா, அம்மா எல்லோரும் நலம்தானே?''

அவள் தலையை அசைத்தாள். அவன் வேலை முடிந்து விட்டது. இளம்புத் தயாரானவன் நின்றான். ஏற்கெனவே அறிமுகம் ஆனவன். அவளுடைய வாழ்வில் பங்கு பெறத் துடித்தவன். ஒரு காப்பி கொடுத்தால் என்ன?

''ஜஸ்ட் எ மினிட் ப்ளீஸ், காப்பி கொண்டு வரச் சொல்கிறேன்'' என்றாள்.

''ஓ... எஸ்... எனக்கொன்றும் ஆட்சேபனை இல்லை.''

அவள் சீட்டிலிருந்து எழுந்து போய் வேறு ஒருவரைச் சிறிது நேரம் தன் ஸீட்டு வேலையைக் கவனித்துக் கொள்ளச் சொல்லிவிட்டு வந்தாள்.

''வாருங்கள், விஸிட்டர்ஸ் அறைக்குப் போகலாம்.''

அவன் அவளைத் தொடர்ந்தான். அவளுக்கு மணமாகி இருக்குமா? இவ்வளவு வருடங்கள் ஆகாமலா இருக்கும்? கேள்வி என்னவோ தொண்டையிலேயே நின்று விட்டது. அவன் சம்மதித்துத் தன் வீட்டில் சம்மதிக்காத பொழுது, இந்தக் கேள்வியைக் கேட்கத்தான் வேண்டுமா?

பணியாள் இனிப்பு, காரம், காப்பி நிறைந்த தட்டைக் கொண்டு வந்து வைத்தான். ''அடேயப்பா, எதற்கு இத்தனை? இன்றைக்கு என் நண்பன் வீட்டிலே கல்யாணம். அங்கே போய் டிபன் சாப்பிட்டு விட்டுத்தான் வருகிறேன். திரும்ப அங்கே தான் போக வேண்டும்.''

''பரவாயில்லை; சாப்பிடுங்கள். கல்யாணச் சாப்பாட்டை மெதுவாகச் சாப்பிடலாம்.''

சட்டென்று நிமிர்ந்தான். பார்வைகள் ஒன்று கலந்து பிரிந்தன.

''நான் வரட்டுமா? வெரி நைஸ் டிரீட், தாங்க்யூ வெரிமச்.''

அவள் கையை அசைத்து 'பை பை' சொன்னாள். அவன் தன் பார்வையிலிருந்து மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்று மாலை வீட்டுக்குக் கிளம்பும் பொழுது காலையில் இருந்த கனத்த மனம் இல்லை. ரவியின் வரவு மனத்தை இலேசாக்கி விட்டிருந்தது. 'ரவியுடன் நான் இன்னும் பேசி இருக்க வேண்டுமோ? எதுவுமே தெரியவில்லை என்று நினைத்துக் கொள்வாரோ?'

அம்மா அவளை வாசலிலேயே எதிர்கொண்டு அழைத்துப் போனாள். இனிப்பின் நெடி, எண்ணெய் கமறல், பில்டரில் இறங்கும் புது டிகாக்ஷனின் கம்மென்ற மணம், கலந்து வந்து நாசியில் மோதின. நிர்மலாவுக்குப் புரிந்தது.

இன்று யாரோ ஒருத்தன் வரப் போகிறான். வந்து டிபனைச் சாப்பிட்டு விட்டுப் போய் நாளையே துணிவாக நிராகரித்து விடப் போகிறான். அம்மா தயங்கினாள்.

''நிம்மா.''

''என்ன?'' விறைப்பாகவே கேட்டாள்.

''நீ பளிச்சுனு டிரஸ் பண்ணிக்கோம்மா.''

அவளுக்கு எரிச்சலாய் இருந்தது. ''சரி, புடவை கூட மாற்ற மாட்டேன். முகத்தைக் கழுவிப் பொட்டும், பூவும் மட்டும் வைத்துக் கொள்வேன். என்ன, சரியா? இப்படியே வரவன் பார்த்துக் கொள்ளட்டும். சம்மதிச்சா சம்மதிக்கட்டும், இல்லாவிட்டால் போகட்டும்'' என்று குரலெடுத்துச் சீறினாள் நிர்மலா.

''இந்தக் கோலத்திலேயே பார்த்து விட்டேன். ஏற்கெனவே சம்மதம் கொடுத்தவன் தானே? மாறவே இல்லை. நீ பெண் பார்க்கச் சம்மதிப்பாயோ, மாட்டாயோ என்றுதான் இவர்கள் உன்னிடம் சொல்லவில்லை. அதனால் தான் பாங்க் வர ஒரு வேலையை ஏற்படுத்திக் கொண்டு காலையில் வந்தேன். ஓ. கே?''

எதிரே ரவி நின்றான். நிர்மலா உள்ளே ஓடினாள்.

திருவிகா சவன் முன்னிலையில் திருத் தணியில் திருமணம் முடிந்துவிட்டது. ஹனிமூனுக்கு எங்கேயும் போகவில்லை. அவர்கள் கனடா போய் விடுவார்கள் என்பதால் நிர்மலாவின் அப்பா, அம்மா எங்கும் அனுப்ப மறுத்து விட்டார்கள்.

ஒருமாலை. நிர்மலாவும், ரவியும் சினிமா போய் விட்டு ஹோட்டல் ஒன்றில் நுழைந்தார்கள். கூட்டம் நிரம்பி வழிந்தது. ''டேய் ரவி, இங்கே வாடா, இடம் இருக்கிறது.''

''டேய் பழி, கல்யாணத்துக்கு வராமல் எங்கேடா தொலைஞ்சே?''

நிர்மலாவின் கால்கள் நின்ற இடத்திலேயே நின்றன. ''என்ன நிர்மலா, அங்கேயே நிற்கிறாய்? கமான், மீட் மை ஃப்ரண்ட் ரஞ்சன்'' என்றான் ரவி குறுஞ்சிரிப்புடன்.

''என்ன ரவி, உன் மிஸஸ்ஸுக்கு என்மீது உள்ள கோபம் போகவில்லை போலிருக்கே?''

''அட, நிர்மலாவை உனக்குத் தெரியுமா? உன் மீது அவளுக்கு என்ன கோபம்?'' என்று கேட்டான் ரவி.

''அதை நானே சொல்கிறேன். இவர் பெண் பார்த்து விட்டுச் சம்மதம் தருவார்.



ஒரு ஹோட்டல் சர்வருக்குத் திராத வயிற்று வலி. மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லப் பட்டார்.

ஒரு டேபிளில் அவரைப் படுக்க வைத்திருந்தார்கள். வயிற்று வலி வேதனையை அவரால் தாள முடிய வில்லை.

அவ்வழியே ஒரு டாக்டர் போய்க் கொண்டிருந்ததைக் கண்டார் சர்வர். ஏற்கெனவே பார்த்த முகமாய் இருந்தது. ''ஐயா, வலி உயிர் போகிறது. கொஞ்சம் என்னைக் கவனியுங்களேன்!'' பரிதாபமாகக் கெஞ்சினான்.

''மன்னிக்கவும். அது என் டேபிள் அல்ல. வேறொருவர் வருவார்'' என்று கூறிக் கொண்டே டாக்டர் நகர்ந்தார்!

எஸ். ரவி.

பிறகு சம்மதம் இல்லை என்பார். இப்படி எத்தனை பெண்கள் வீட்டிற்குப் போய் இவர் அவர்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறாரோ, தெரியவில்லை'' என்று படபடத்தாள் நிர்மலா.

''நிர்மலா சொல்வது உண்மை. அவளைப் பார்த்தேன். சம்மதம் கொடுத்தேன் ஆனால் பின்னால் நிர்மலாவின் பேச்சில் தன்னை மறந்து என்னை ரஞ்சன் என்று அழைப்பதற்குப் பதில் ரவி என்று அழைத்தாள். பிறகு நீ கனடாவிலிருந்து வந்த பொழுது உன்னைச் சந்தித்தேன். நிர்மலாவைப் பார்த்து அவளுக்குக் கல்யாணம் ஆகாமல் இருந்தால் அவளைத் தான்பண்ணிப்பேன் என்று பேச்சினிடையே நீ சொன்னாய். அதனால் சம்மதம் கொடுத்த நான் சம்மதமில்லை என்று பேச்சு மாற்றினேன். நீ நிர்மலாவைத் தேடிப் போய் மணந்து கொண்டாய்.''

நிர்மலாவால் பேச முடியவில்லை. ''வெரி ஸாரி ரஞ்சன்'' என்றாள்.

''கரெக்டாக இப்போது என் பெயரைச் சொல்லி விட்டாய். உன் மனத்தில் ரவி தன் பெயரை எழுதி விட்டான். அதை நான் எப்படி அழிப்பேன்? என்னால் முடிந்தது உங்கள் கல்யாணம் நடக்க வழி செய்வது ஒன்றுதான். நான் மறுத்தால் அந்த வீம்பில் உன் அம்மா ரவிக்கு - ஃபாரின் மாப்பிள்ளைக்கு உன்னைத் தருவாள் என்று நினைத்தேன். அதன்படியே நடந்தது.''

ரஞ்சன் ரவியின் கையைப் பற்றிக் கொண்டான்.

சர்வர் இனிப்பு நிறைந்த தட்டுக்களை அவர்களுக்கு முன்பு நகர்த்தினான்.

# பினாகா டூத்ப்ரஷ்
# பாதுகாப்பான மழுக்கப்பட்ட முனைகள் கொண்டது, ஈறுகளுக்கு ஊறு செய்யாது




எல்லாப் பருவத்திற்கும்,
விருப்பத்திற்கும் ஏற்றபடி
பினாகா டூத் ப்ரஷ் கிடைக்கிறது

ஸிபா-காய்கி



# பினாகா

இந்தியாவில் அனைத்திலும் அதிக விற்பனையுள்ள டூத் ப்ரஷ்.

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி —

ஹிந்து முஸ்லீம் பிரச்னை குறித்து ஸி. ஆர். எழுதிய கட்டுரை, யங் இந்தியா ஆசிரியர் காந்தியினால் நிராகரிக்கப்பட்ட அந்தச் சந்தர்ப்பத்தில் ஓர் அனைத்துக் கட்சி மகாநாடு கூடி ஸைமன் கமிஷன் முயற்சிக்கு மாற்றாக ஓர் அரசியல் சாஸனத் திட்டத்தை வகுத்துக் கொண்டிருந்தது. ஹிந்து – முஸ்லீம் பிரச்னை அதற்கு முட்டுக்கட்டையாக இருந்து வந்தது.

லக்னௌவில் அனைத்துக் கட்சிகள் மகாநாடு ஆகஸ்டில் கூடியபோது இந்த முட்டுக்கட்டை நீக்கப்பட்டு விட்டதாகத் தோன்றியது.

1928ல் சில கால கட்டங்களில் ஸி. ஆர்., மனச் சோர்வடைந்திருந்தார் என்பது மே மாதத்தில் அவர் மகாத்மாவுக்கு எழுதிய ஒரு கடிதத்திலிருந்து தெரிய வருகிறது. ஆனால் இப்படி ஒரு கடிதத்தை எழுதத் தூண்டியது எது என்பது தெளிவாகவில்லை:

''நான் அமைதி பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் தாங்கள் எழுதிய கடிதம் எனக்கு உதவவில்லை. உங்கள் அன்பையும் அனுதாபத்தையும் நான் உணர்கிறேன். ஆனால் அமைதி என்பது உள்ளத்திலிருந்து தோன்ற வேண்டும். இப்போது என் நிலை, வற்றிய தொண்டைபோல் இருக்கிறது. எச்சிலைக் கூட்டி விழுங்கப் பார்த்தாலும் வலிக்கிறது!''

ஆசிரமத்தைச் சுற்றி இருந்த வறண்ட பூமி மகிழ்ச்சி தரவில்லை. தொடர்ந்து இடைவிடாத பஞ்சம்தான் தலைவிரித்தாடும் போலிருந்தது. 'ஆசிரமத்தைச் சுற்றிலும் இந்தப் பகுதிகளில், முன்னர் கைவிடப்பட்ட நூற்பு – நெசவுத் தொழில் புனருத்தாரணம் ஆகியுள்ளது' என்று ஸி. ஆர். யதார்த்த நிலையைக் குறிப்பிட்டார். 'அரைப் பட்டினி கிடந்த பல குடும்பங்களுக்கு இன்று சில கவளங்கள் அதிக உணவு கிடைக்கிறது' என்றும் எழுதினார். இருப்பினும் கதர் தயாரிப்பு, விற்பனையில் முன்னேற்ற வேகம் ஸி. ஆருக்குத் திருப்தி அளிப்பதாக இல்லை.

''ஸி. ஆருக்கு ஒரு நூற்றாண்டு காலம் கூடக் காத்திருக்கும் பொறுமை உண்டு. நாளை வெற்றி பெறுவோம் என்ற ஆசையுடனும் நம்பிக்கையுடனும் அவர் செயல்படுவார்'' என்பது மகாத்மாவின் கருத்தாக இருந்தது. இவ்விதம் கூறியபோது காந்தி ஒரு லட்சிய நோக்கினை வர்ணித்துக் கொண்டிருந்தார்.

லாலா லஜபதிராய்



ஆனால் யதார்த்தமாகப் பார்த்த போது ஸி. ஆர். சில சமயங்களில் யோசனைகளில் ஆழ்ந்தார். 'தன்னலமற்ற தொண்டர்கள் எதிர்காலத்தில் கதரைக் காப்பாற்றுவார்களா?' என்று சிந்தித்தார். 'இந்த ஆசிரமம் ஏதோ அந்நியமாக, மக்களுடன் ஒட்டாமல் இருக்கிறதோ?' என்ற சந்தேகமும் எழும். கதரைப் பொறுத்த மட்டில் தியாகத்துடன் கூடிய தீவிர ஈடுபாடு மக்களிடம் உருவாகவில்லை எனில் அதன் ஆயுள் அதிக காலம் நீடிக்காது; லங்காஷயரிலும் இந்தியாவில் மில் முதலாளிகளும் ஆசையோடு எண்ணியது போல் காந்தியின் வாழ் நாள் வரைதான் கதரின் ஆயுளும் இருக்கும் என அவர் அஞ்சினார்.

## 29. அழைப்பு வந்தது

கதர் பிரசாரத்துக்கு ஸி. ஆரின் உதவி சதா தேவைப்பட்டுக் கொண்டே இருந்தது. கதர் குறித்து அவர் தயாரித்த ஒரு கணிப்பினை ஏப்ரலில் வைஸ்ராய் இர்வின் பிரபுவுக்கு காந்தி அனுப்பி வைத்தார். அத்துடன்



இணைக்கப்பட்டிருந்த கடிதத்தில் ஸி. ஆரைப் பிரபலமான வழக்கறிஞர் என்று காந்தி வர்ணித்திருந்தார். வைஸ்ராயுடன் ஸி. ஆருக்கு ஏற்பட்ட முதல் தொடர்பு இதுதான். எதிர்காலத்தில், சிறிது நேரமேயானாலும் மிகப் பயனுள்ளதான சந்திப்பு இருவரிடையேயும் நிகழவிருந்தது.

பூனாவில் ஸி. ஆர். மே மாதத்தில் ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்டினார்: ''ஏராளமான முதலீட்டுக்குப் பிறகும், நீண்டகாலம் செயல்பட்ட பிறகும், நூற்பு நெசவு ஆலைகள் நாலு லட்சம் மக்களுக்கே வேலை வாய்ப்பு அளித்திருக்கின்றன. அந்த முதலீட்டில் மிகச்சிறிய சதவீதமே கதர் உற்பத்திக்கு மூலதனமாகி இருந்த போதிலும் நாலே ஆண்டுகளில் அது ஒரு லட்சம் பேர்களுக்கு அவரவர் வீட்டிலேயே வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தந்திருக்கிறது. அகில இந்திய நூற்போர் சங்கத்துக்கு இது ஒன்றும் மோசமான சாதனை அல்ல.''

இவ்விதம் அடக்கமாகக் கூறி முடித்த ஸி. ஆர்., இதற்குள் கதர் நிபுணராகவே ஆகி விட்டிருந்தார். யதார்த்தமான அறிவுரைகள் வழங்கக் கூடிய நிலையில் இருந்தார். சபர்மதியில் அதே ஆண்டில் அவர் பின்னால் பேசும்போது கதர் ஊழியர்களிடம் பின்வருமாறு கூறினார்: ''(1) தொழில் நுணுக்கங்களில் நிபுணத்துவம் பெறுங்கள். (2) உங்களை நீங்களே மிக உயர்ந்த தார்மீக புருஷர்களாக எண்ணிக் கொள்ளாதீர்கள். எழுதப்படிக்கத் தெரியாத கிராம மக்களிடம் உங்களிடம் இல்லாத நற்குணங்கள் சில இருக்கலாம் என்பதை உணருங்கள். (3) யாருடைய கவனத்தையும் கவராத, செய்ததையே திரும்பத் திரும்பச் செய்கிற வேலைதான் இது. எனினும் இதில் திருப்தி அடையுங்கள். (4) வியாபார நோக்கில் நடந்து கொள்ளுங்கள். (5) கதர் சார்பில் பேசுவதற்குக் கற்றுக் கொள்ளுங்கள்.

ஸி. ஆரின் ஆசிரமம், சுற்று வட்டார மக்களுக்குச் செய்துதர முடிந்த வசதிகளைவிட அவர்களுடைய தேவைகள் எப்போதும் அதிகமாகவே இருந்தன. இதனால் ஜூலை மத்தியில் ஆசிரமத்தை விரிவு படுத்த வேண்டியிருந்தது. அதுவரை, கடந்த 19 மாதங்களாக, 28,095 நபர்களுக்கு ஆசிரமம் சிறு நோய்களுக்குத் தயாராக இருந்த மருந்துகளைக் கொடுத்து வந்தது. இப்போது ஒரு சிறு மருத்துவ மனையே உருவாகி விட்டது. இங்கு முன் போலவே வைத்திய உதவி இலவசமாகவே தொடர்ந்தது. ஸி. ஆரின் விஞ்ஞானி நண்பர் டாக்டர் பி. ஸி. ரே அதனை ஜூலை 14 திறந்து வைத்தார்.

பஞ்சம் உக்கிர நிலையை அடைந்தது. கிணறுகளில் இறங்கி பெண்கள் அடிவாரத்தில் இருந்த சிறிதளவு நீரைக் கொட்டாங்குச்சியினால் வழித்தெடுக்க முயன்றார்கள். வறட்சியை எதிர்த்துப் போராட்டம் நடந்தது. ஆசிரமத்தைச் சுற்றி மூன்று மைல் தூரத்துக்குள் இருந்த தீண்டாதாரான 250 ஏழைக் குடும்பங்களைப் பதிவு செய்து கொண்டு அவர்களுக்கு மைசூரிலிருந்து தருவிக்கப்பட்ட மலிவான சோளத்தைப் பாதி விலைக்கு ஆசிரமம் விற்றது.

''அவசர உதவி வேணும்னு: 100க்கு நானே டயல் பண்ணணும்?''

''எஸ்! இப்ப உனக்கு என்ன அவசர உதவி தேவை?''

''ஐந்து ரூபாய் கைமாற்று வேணும்.''



இதற்குச் சரக்குக் கட்டணம் மிகுதியாக இருந்தது. சலுகை காட்ட ரயில்வே மறுத்து விட்டது. ஆனால் நன்கொடை கோரி யங் இந்தியாவில் விடுக்கப்பட்ட அறிக்கை 35 வாரங்களுக்கு நிவாரணம் அளிப்பதைச் சாத்தியமாக்கியது.

1929 ஜூன் மாதத்துக்குள் பதிவான குடும்பங்களின் எண்ணிக்கை 418 ஆக உயர்ந்து விட்டது. இவர்கள் 17 கிராமங்களில் வசித்தவர்கள். ஜாதி ஹிந்துக்கள் என்று கருதப்பட்ட ஏழு குடும்பங்களும் இதில் அடக்கம். இந்த அவலத்தினிடையேயும் ஏற்பட்ட ஒரு நன்மை ஸி. ஆருக்கு மிகவும் திருப்தி அளித்தது: ஆசிரமத்தின் உதவியைப் பெற்றவர்கள் குடிப்பழக்கத்தை விட்டு விட்டதாகத் தாமாகவே வாக்குறுதி தந்தனர்.

ஆசிரியர் — எழுத்தாளர் என்கிற முறையில் மகாத்மாவுக்கும் ஸி. ஆருக்கும் இடையே இருந்த கருத்து வேற்றுமைகளோ அல்லது அவர்களிடையே இருந்த பல மைல் இடைவெளியோ அவர்களுடைய நட்பைப் பாதிக்கவில்லை. 1928ம் ஆண்டின் மையத்திலிருந்து காந்தியுடனும் வேறு சிலருடனும் சேர்ந்து நவஜீவன் அறக்கட்டளையின் அறங்காவலராக ஸி. ஆரும் பணியாற்றி வந்தார். யங் இந்தியாவையும் நவஜீவனையும் இந்த அறக்கட்டளை ஏற்று நடத்தி வந்தது. ஸி. ஆரும் காந்தியும் கடிதங்கள் வாயிலாகவே வருத்தங்களைப் பகிர்ந்து கொண்டார்கள். விச்ராந்தியாக உரையாடினார்கள்.

ஆசிரமத்தில் நோயுற்ற ஒரு கன்றினை அழித்து விட ஸி. ஆர். அனுமதி யளித்ததற்காகச் சிலர் கண்டனம் தெரிவித்தனர். இது குறித்து மகாத்மா ஸி. ஆருக்கு எழுதினார்: ''எனக்கு வரும் கடிதங்கள் எல்லாவற்றையும் நான் பொருட்படுத்துவது என்று ஆரம்பித்தால் சபர்மதியில் என்னை நானே மூழ்கடித்துக் கொள்ள வேண்டியதுதான்!''

நவம்பரில் லாலா லஜபதிராய் காலமானார். போலீஸ் தடிதடிப் பிரயோகத்தை ஏற்ற சில வ[illegible]களுக்குப் பிறகு அவர் முடிவு சம்ப[illegible]. ஸி. ஆர். காந்திக்கு எழுதினார்:

''தன்னலமற்ற தேசபக்தியே லாலாஜியாக உருவெடுத்து வந்ததோ என்று எண்ணும்படி விளங்கியவர். இந்தியா சில காலம் கழித்துச் சமாதானம் அடையும் என்று வைத்துக் கொண்டாலும் பஞ்சாப் இந்த இழப்பை எப்படிச் சகித்துக் கொள்ளப் போகிறது?''

○ ○ ○

வருட முடிவில் நடந்த காங்கிரஸ் மகாநாடு காந்திய வழிக்குத் திரும்பக் கட்டியம் கூறியது. வல்லபாயின் பார்டோலி சாதனையை மதித்துப் போற்றும் விதமாக அவரை மகாநாட்டுக்குத் தலைமை ஏற்கச் செய்ய வேண்டும் என்று சிலர் ஆசைப்பட்டபோதிலும் மகாத்மா வற்புறுத்தியதன் பேரில் மோதிலால் நேருவே தலைமை வகித்தார். (தொடரும்)

**தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்**

எல்லோரும் கல்லூரி மாணவ, மாணவிகளாம். பரீட்சை சமயமாதலால் வீட்டில் கவனமாய்ப் படிக்க இயலாது என்று ஹோட்டலில் அத்தனைபேரும் அறைகள் எடுத்துக் கொண்டு தங்கிப் படிக்கிறார்களாம்.

படிக்கிறார்களா? இவர்களா? பேச்சும், சிரிப்புமாய் இருந்தவர்களைப் பார்த்தால் நிஜமாய்ப் படிக்க உட்கார்ந்தவர்கள் மாதிரி எனக்குத் தோன்றவில்லை.

நான் பேச்சுக் கொடுக்கவும் யாருடன் அரட்டை அடிக்கலாம் என்று காத்திருந்தவர்கள் போல் கப்பென்று பிடித்துக் கொண்டார்கள்.

''புடவை எப்படிக் கட்டுவது, சொல்லிக் கொடுங்கள்'' என்றாள் ஒருத்தி.



# மனம் கவர்ந்த மலேஷியா—௨

சிவசங்கரி

''உங்கள் கதைகளைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்'' — ஒரு மாணவன்.

''உங்களுக்குக் கதை எழுத 'கரு' ஒன்று சொல்லட்டுமா?'' இது அடுத்தவன்.

கைகளில் புஸ்தகங்களோடு, ஆளுக்கு ஒரு நாளிதழையும் வைத்திருந்ததால் பேச்சு எங்கெல்லாமோ வளைந்து நெளிந்தது.

''இன்றைக்குவந்த சேதிகளிலேயே எனக்குப் பிடித்தது இதுதான்'' என்று சொல்லி என்னையும் அதைப் படிக்க வைத்தாள் ஒரு பெண்.

அறுபத்தி இரண்டு வயசான பெண்மணியுடன் ஒரு பேட்டி. கல்யாணம் செய்துகொள்ளாமல் தனிப் பெண்ணாய் இத்தனை வருஷங்களைக் கழித்து விட்ட அவரிடம் நண்பர் கேட்கிறார்: ''உண்மையைச் சொல்லுங்கள் — ஒரு ஆண் துணை இல்லையே என்று ஒரு தடவை கூட நீங்கள் ஏங்கியது கிடையாதா?'' என்று.

பெண்மணி புன்சிரிப்போடு சொல்கிறார் — ''உண்டு — உண்டு... கார் டயர் பஞ்சராகி அந்தச் சக்கரத்தை மாற்ற நேர்ந்த போதெல்லாம் ஆண் துணை இல்லையே என்று நான் வருந்தியதுண்டு!''

இதை நான் படித்து முடித்ததும் இப்பேட்டியைக் குறித்து மாணவ மாணவிகளிடம் வாக்குவாதம் எழத் தொடங்கியது.

தலைக்குத் தலை பேச முற்பட்டார்கள்.

சரியான அரட்டைகள், இவர்களாவது, பாடமாவது, படிப்பதாவது?

எனக்குத் தூக்கம் கண்களைச் சுழற்ற விடைபெற்றுக் கொண்டு படுக்கச் சென்றேன்.

ஈப்போவுக்குப் போகும் வழியில் இரண்டு பக்கமும் ஆங்காங்கு நிறைய, நெடுஞ்சாலை பழக்கடைகள் உள்ளன. தங்கள் பழத் தோட்டங்களில் விளையும் பழவகைகளைச் சின்னதாய் கூடாரம் போட்டுத் தோட்டச் சொந்தக்காரர்கள் விற்கின்றனர்.

ஒரு கடையை ஒட்டியிருந்த வீட்டுக்குள் நான் சென்று பார்த்தேன். நேர்விசான, சர்வ சௌகரியங்களையும் கொண்ட அதை,



✕ இலக்கியக் கூட்டத்தில் கட்டுரை ஆசிரியர்

சாதாரண விவசாயி ஒருவரின் வீடு என்று சொன்னால் நம்புவது கஷ்டமாக இருந்தது.

வீட்டு முகப்பில் இருந்த புல்வெளியில் வீட்டுக்காரி, தன் குழந்தையை விளையாட விட்டுவிட்டு ஸ்வெட்டர் பின்னிக் கொண்டிருந்தாள்.

குழந்தை அசல் செல்லுலாய்ட் பொம்மைதான். எடுத்துக் கொள்ளேன் என்கிற மாதிரி என்னைப் பார்த்துச் சிரித்தது.

குழந்தை மட்டுமல்ல, அந்தப் பெண்மணி கூடப் பெரிய, வளர்ந்த செல்லுலாய்ட் பொம்மை மாதிரிதான் இருந்தாள்.

அது என்ன மொழு மொழுப்பு? மாசு மருவு இல்லாத தோல்? சிவப்பும், வெளுப்பும் கலந்த ரோஜா நிறம்? வழவழவென்ற தோள்களை



சீனப் பெண், சீனக் குழந்தை

யும், உருண்ட கைகளையும், துடைத்து விட்ட முகத்தையும் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல அல்லவா இருக்கிறது?

மலேஷியா, சிங்கப்பூரில் பார்த்த சீனர்களில் பெரும்பான்மையோர் — ஆண்கள் உள்பட — மெழுகால் செய்த தோலைக் கொண்டவர்கள் மாதிரி வழுவழுவென்று இருந்ததை நான் கவனித்தேன். முகத்தில் பருக்கள் இல்லாதது கூட எனக்கு ஆச்சரியமாகத் தென்படவில்லை. ஆனால் ஒருத்தியைப் போல முகம், கை, கால்களில் முடி இல்லாமல் இருந்தது தான் ரொம்ப அழகு. கீறு போல புருவம், தேவையான இமைகள். இவ்வளவுதான். ஆண்களும் மழுமழுப்பான முகங்களோடு இருந்ததை நாங்கள் கண்டு வியந்தபோது சிலர் சொன்ன விவரம் ரொம்பப் புதிதாக இருந்தது.

சுபாவத்திலேயே சீனர்களுக்கு முகம், கை, கால்களில் முடி வளர்வது கிடையாதாம். ஷேவ் செய்தால் முடியின் வளர்ச்சி அதிகரித்து விடும் என்று பல ஆண்கள், தாடி, மீசையை வளரும்போதே வேரோடு பிடுங்கி விடுகிறார்களாம்.

முதலில் இவ் விவரத்தைக் கேட்டபோது எனக்கு இதை நம்புவது கஷ்டமாக இருந்தது. அப்புறம் சிங்கப்பூரில் காரில் போகும் போது நானே பார்த்தேன். எங்களுக்கு முன் சென்ற வண்டியில் மனைவி கார் ஓட்ட, பக்கத்தில் கணவன் ஒரு சின்ன ட்வீஜருடன் (Tweezer) அமர்ந்து கண்ணாடியில் முகத்தைப் பார்த்து முடிகளைப் பிடுங்கிக் கொண்டிருந்ததை என் கண்ணாலேயே பார்த்தேன்.

''என்ன பண்ணுகிறான் அவன்?'' என்று அருகில் இருந்த ஹேமாவை, என் கஸினின் மனைவியைக் கேட்டேன்.

''ஹி இஸ் ப்ளக்கிங் ஹிஸ் பியர்ட் — He is plucking his beard. ஆபீஸுக்கு நாழியாகி விட்டதால், மனைவி வண்டி ஓட்ட இவன் காரிலேயே காரியத்தை முடித்துக் கொள்கிறான். இங்கு சில ஆண்கள் ப்யூட்டி பார்லருக்குப் போய்க்கூட முடிகளைப் பிடுங்கிக் கொள்வார்கள். தெரியுமா?''

''நம் நாட்டில் பெண்கள் புருவங்களைச் சீர் செய்து கொள்வது நமக்குத் தெரியும், அது மாதிரியா?''

குழந்தையைக் கையில் வைத்துக் கொண்டு சீனர்களின் தோல் பற்றின எண்ணங்களில் நான் அமர்ந்திருந்த சமயத்தில் வீட்டுக்குள்ளிருந்து குழந்தையின் தகப்பன் வந்தான்.

நிமிர்ந்து பார்த்தேன். அதே மழுமழுப்பான முகம்! எனக்குச் சிரிப்பு வந்து விட்டது. குழந்தையை அவனிடம் கொடுத்து விட்டு காருக்குத் திரும்பினேன்.

ஒரு கொத்து ரம்புதான், இரண்டு டஜன் பழங்கள் கொண்ட மங்குஸ்தான் சரம் என்று வாங்கின பின் எங்கள் ஈப்போ பயணத்தைத் தொடர்ந்தோம்.

ஈப்போவின் முன்னணி பெண் எழுத்தாளரான திருமதி கமலாட்சி ஆறுமுகம் ஏற்பாடு செய்திருந்த வரவேற்பு கலந்துரையாடல் ஈப்போ நூலகக் கூடத்தில் ஆறு மணிக்குத் துவங்கியது. இந்தக் கூட்டம் ஆயுளுக்கும் மறக்க முடியாத ஒன்றாக அமைந்து போனதற்கு அன்று எழுந்த காரசாரமான கேள்வி பதில்கள் காரணமாகும்.

ஒருவர் 'இவளை எப்படியாவது மட்டம் தட்டியே தீருவது' என்று கங்கணம் கட்டிக் கொண்டவர் போல் ஈப்போ நிகழ்ச்சிக்கு வந்து பல்வேறு கோணங்களில் என்னை மடக்க முயன்றதைப் பற்றி, தாக்கிப் பேசியதைப் பற்றி இப்போது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். எனக்குக் கிடைத்த நல்ல வரவேற்புகளைப் பற்றிக் கூறி வந்தால் போதுமா? இதையும்தானே சொல்ல வேண்டும்?

''உங்கள் சமீபத்துக் கதையான 47 நாட்களில் விசாலி தன் கணவனை 'டா' போடுவதும், 'ராஸ்கல்' என்று அழைப்பதுமாய்ச் சித்திரித்திருக்கிறீர்கள். இதுதான் தமிழ்ப் பண்பாடா? இதில் உங்களுக்கு உடன்பாடு உண்டா?'' — இப்படி ஒரு கேள்வி.

என் பதில்: ''ஒன்றுமே தெரியாத பதினாறு வயது கிராமப் பெண்ணை, விசாலியை இங்கு மணந்த குமார், அமெரிக்காவுக்கு அழைத்துச் சென்று அங்குள்ள தன் முதல் அமெரிக்க மனைவியிடம் 'தங்கை' என்று அறிமுகப் படுத்துகிறான். இது எத்தனை கயமைத்தனம்! இப்படியொரு கணவனுக்கு என்னைப் பொறுத்த வரையில் கண்டிப்பாய் மரியாதை தேவையில்லை. கணவர்கள் எல்லாம் என்றைக்கு ராமன்களாக இருக்கிறார்களோ, அன்றைக்குக்




சிகரெட் புகைக்கும் பழக்கத்தை விட்டொழிக்க டென்மார்க்கில் ஒரு வழி கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்தச் சிகரெட் பாக்கெட்டில் உள்ள போலி சிகரெட்கள் பார்க்கவும் ஸ்பரிசிக்கவும் அசல் போலவே உள்ளன. விலையும் அசல் பாக்கெட் விலைதான். ஆனால் புகையிலைக்குப் பதில் மென்தால் மணத்துடன் கூடிய எரிக்க முடியாத நார்களே உள்ளன.

புகை பிடிப்பதாக எண்ணிக் கொண்டு இதைப் பயன்படுத்தி மன ஆறுதல் பெறலாம். நாளடைவில் பழக்கம் விட்டுப் போகும்.

நன்றி: நியூஸ் வீக

கண்டிப்பாய் மனைவிகளும் சீதைகளாய்த் தான் இருப்பார்கள்.''

இப்படிக் கேள்வி பதில்கள் சுவையாகப் போய்க் கொண்டிருந்த போது கூட்ட முடிவுக்கு அரை மணி இருக்கையில் அதுவரை ஒரு பக்கமாக அமர்ந்திருந்த இருவர் எழுந்து நின்று கேள்விகளைக் கேட்கத் தொடங்கினர்.

''உங்கள் கதை ஒன்றில் அயல் நாட்டுக்குப் படிக்கப் போன கதாநாயகன் அங்கு பெண் ஒருத்தியுடன் தொடர்பு கொண்டதன் விளைவாக அவனுக்கு 'ஜேன்' என்ற ஒரு பெண் இருப்பது காலம் தாழ்ந்து அவன் மனைவிக்கும் அவனுக்கும் தெரிய வருகிறது. உங்கள் கணவர் அயல்நாட்டில் இருந்தவர். உங்களுக்கும் அப்படி ஒரு 'ஜேன்' வந்தால் என்ன செய்வீர்கள்?''

'இலக்கியக் கூட்டத்தில் இப்படிப்பட்ட ஒரு கேள்வி அவசியம்தானா?' என்று நினைப்பு எழ நான் ''நண்பரே; பதினைந்து வருஷ காலமாய் என் கணவரோடு குடித்தனம் செய்யும் நான் அவரை ஒரு ராமர் என்று நன்கு அறிவேன். உங்களுக்குச் சவால் விடுகிறேன் — நாங்கள் இந்த மண்ணில் இன்னும் நான்கு நாட்கள் இருக்கப் போகிறோம். அவரைக் கிருஷ்ணராக மாற்ற முடியுமா என்று முயன்று பாருங்களேன் — அப்புறம் உங்களுக்கே உங்கள் கேள்விக்குப் பதில் கிடைத்து விடும்'' என்றேன்.

சபையில் நல்ல ஆரவாரம்.

கேள்வி கேட்பவருக்கு சூடு பிறந்து விட்டது.

''சரி-பெரிய எழுத்தாளர் என்று சொல்லிக் கொள்கிறீர்கள், ஆசாரக் கோவை என்றால் என்ன? சொல்லுங்கள் பார்க்கலாம்.''

''முதலில் உங்கள் கேள்வியைத் திருத்த விரும்புகிறேன். எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் நான் இதுவரை என்னை ஒரு பெரிய எழுத்தாளர் என்று சொல்லிக் கொண்டதே இல்லை. அதைத் தெரிந்து கொள்ளுங்கள். அப்புறம்,.. நான் தமிழை முறையாகப் பயின்றவள் அல்ல என்று எத்தனையோ முறைகள் சொல்லியும் நீங்கள் இக்கேள்வியைக் கேட்பது எனக்குச் சரியாகத் தோன்றவில்லை. திரு. கி. வா. ஜ. திரு நா. பா. போன்றவர்கள் இங்கு வரும் போது கேளுங்கள்; சிறப்பாய்ப் பதில் சொல்லுவார்கள்.''

''அது எப்படித் தெரியாது என்று நீங்கள் ஒதுங்கலாம்? நீங்கள் தமிழில் எழுதும் எழுத்தாளர்தானே? ஆசாரக் கோவையை விடுங்கள், பிள்ளைத் தமிழ்ப் பருவங்களையாவது சொல்லுங்கள்.'' —

விடாக்கொண்டரின் கேள்விகளால் எனக்குக் கோபம் வரவில்லை, சிரிப்புத் தான் எழுந்தது.

''நீங்கள் தொடர்ந்து இதையே கேட்பது எப்படி இருக்கிறது, தெரியுமா? 'நான் நொண்டி' என்று சொல்பவரை 'எழுந்து ஓடு, ஓடு' என்று விரட்டுகிற மாதிரி இருக்கிறது...''

''சுத்தத் தமிழில் எழுதத் தெரியவில்லை, பேசத் தெரியவில்லை. தமிழ் நூல்களைப் பற்றி விளக்கம் ஏதும் சொல்லத் தெரியவில்லை. பின் உங்கள் எழுத்தினால் யாருக்கு என்ன லாபம்?'' —

நண்பர் ஆக்ரோஷமாக என்னை மட்டம் தட்டியதும், பல அன்பர்கள் எழுந்து நின்று அவரைப் பேச விடாமல் கத்தினார்கள்.

இப்படிப்பட்ட சூடான வாக்குவாதங்கள் ஒருவழியாய் அடங்கி, கூட்டம் முடிந்த பின்பு விதண்டாவாதம் செய்த நண்பர் என் அருகில் வந்து ''ஏதோ உணர்ச்சியில், அப்படியெல்லாம் கேட்டு விட்டேன், மன்னித்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

நான் இவருக்கு என்ன பதில் சொல்ல? ''அத்தனை பேர்கள் நடுவில் பேசினவைகளுக்குத் தனிமையில் என்னிடம் மன்னிப்புக் கேட்கிறீர்கள் — இது உங்களுக்கு நியாயம் என்றால் எனக்கும் சரி'' என்று மட்டும் சொன்னேன்.

கூட்டம் முடிந்து ஜாகைக்குத் திரும்பிய பின்னரும் துரைராஜ், குமணன், இளஞ்செல்வன் இவர்களுக்கெல்லாம் படபடப்பு இருக்கவே செய்தது.

''வீணாய் வம்பைக் கிளப்புகிறார்கள். வானம்பாடியைக் கண்டால் ஆகாதவர், வேண்டாதவர் செய்யும் வேலை இது. நம்மிடம் விரோதம் இருந்தால் அதை நம்மிடம் காட்டட்டும், விருந்தினரிடம் காட்டும் ஏன்? அவளை நினைத்து உரலைக் காயப்படுத்துவது அநாகரிகம் அல்லவா?'' என்று அவர்களுக்குள் பேசிக் கொண்டார்கள். (தொடரும்)

# இந்தியைத் திணிக்காதீர்கள்! ஒற்றுமையைக் குலைக்காதீர்கள்!

## 3

முரசொலி மாறன்

### டில்லி மேயரின் காருக்கு இந்தியில் எண்கள்

அதுமட்டுமல்ல, டில்லி மேயர் தமது காருக்கு இந்தி எண்களையேபயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

போலீசாரால் இவற்றைத் தடுக்க முடியவில்லை; ஏனெனில் இந்த எண்களையெல்லாம் சட்டரீதியாக ஆக்குவதற்கு விரைவில் மோட்டார் வண்டிகள் சட்டம் திருத்தப்படவிருப்பதாக அவர்கள் எதிர்பார்க்கிறார்களாம்!

—இவ்வாறு 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' கூறுகிறது. அப்படிச் செய்தால் நீங்கள் அரசியல் அமைப்புச் சட்டத்தை மீறுகிறீர்கள் என்று பொருள்!

இந்தித் திணிப்பிற்கு இன்னோர் உதாரணத்தைக் கூறுகிறேன் — அந்தமானில் 20 ஆயிரம் வங்காளிகளும் 14,500 தமிழர்களும், 14,000 இந்திக்காரர்களும் வாழ்கின்றனர். ஆனால் அந்தமானில் ஆட்சி மொழி என்ன தெரியுமா? அங்கு வங்காளியரும், தமிழரும் இந்தி பேசுவோரைவிட அதிகமிருந்தும் அங்கே ஆட்சி மொழி இந்தி தான்! இது நியாயமா?

அடுத்து இந்தித் திணிப்பு குறித்துக் கல்கத்தாவில் வசிக்கும் ஒரு குடிமகன் என்ன கருதுகிறார் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 'ஸ்டேட்ஸ்மென்' ஏட்டில் வெளியாகியிருந்த ஒரு கடிதத்தைப் படித்துக் காட்ட விரும்புகிறேன்.

''கல்கத்தாவில் ஒரு ஸ்டேட் பாங்க் கிளையில் 'பாரதீய ஸ்டேட் வங்கி' என்று இந்தியில் எழுதப்பட்டிருக்கிறது. ஆயுள் காப்பீட்டுக் கழகத்தில் கடிதத் தாள்கள் இப்போது இந்தியிலேயே அச்சிடப்படுகின்றன. மத்திய தந்தி அலுவலகம் இந்தியிலேயே தந்தி கொடுக்குமாறு கல்கத்தா மக்களைக் கேட்டுக் கொள்கிறது — விலாசதாரருக்கு இந்தி தெரியுமா என்பது குறித்துக் கவலைப்படாமல்!''

—இதுதான் கல்கத்தாவில் உள்ள நிலைமையாகும்!

ஐயா, 1976-ல் ஆட்சிமொழிச் சட்டத்தையொட்டிப் பிறப்பிக்கப்பட்ட விதிகள் தமிழ்நாட்டுக்கு முழு விதிவிலக்கு அளித்திருக்கின்றன!

ஆனால், இன்று தமிழ்நாட்டில் நடப்பதென்ன?

—யாரும் அப்படி ஒரு விதிவிலக்கு இருப்பது பற்றிக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை!

6-8-1978 'சன்டே ஸ்டாண்டர்ட்' ஏடு கீழ்க்கண்டவாறு தமிழ்நாட்டு நிலைமையைக் கூறுகிறது:

''மத்திய அரசு அலுவலகங்களில் உள்ள பெயர்ப் பலகைகளும், ரப்பர் ஸ்டாம்புகளும் கடிதத்தாள் தலைப்புகளும் இந்தியிலும், ஆங்கிலத்திலுமே இருக்க வேண்டும் என்கிற விதி கடுமையாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. எல்லாப் படிவங்களையும் அவர்கள் இந்தியிலும், ஆங்கிலத்திலுமே அச்சடித்திருக்கின்றனர். உள்ளூர்மொழியை விலக்கி விட்டனர்.''

—இது மிகவும் முக்கிய பிரச்சினையாகும். உடனடியாக அமைச்சர் தலையிட்டு இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும்.

### தமிழகத்தில் பணிபுரிய இந்தி தேவையா?

ஐயா! இன்னொரு முக்கியமான விஷயம்-அண்மையில் தமிழ்நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகளில் எழுத்தர் வேலைகளுக்காக ஆட்கள் தேவை என்கிற விளம்பரம் ஏடுகளில் வெளிவந்தது. ஆனால் அவர்கள் இந்தி தட்டெழுத்திலும், சுருக்கெழுத்திலும் பயிற்சி பெற்றிருக்க வேண்டும் என்று அந்த விளம்பரம் கூறுகிறது.

விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ள தமிழ்நாட்டிலும், பாண்டியிலும் பணியாற்றுவதற்கு இந்தி அறிவு எதற்காக?

அடுத்து — மத்திய அரசில் எழுத்தர் உத்தியோகங்களுக்குப் பிராந்தியங்களில் உள்ள Staff Selection Board ஆள் எடுக்கிறது. ஆனால் அதற்கான தேர்வுகள் இந்தியிலும், ஆங்கிலத்திலும் மட்டுமே நடத்தப்படுகின்றன. எங்கள் வீட்டுப் பிள்ளைகள் தாய்மொழியையும், ஆங்கிலத்தையும் கற்க வேண்டும்,

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''என்ன இது? ஃபேன் ஓடிக்கிட்டிருக்கும் போது கூட உங்களுக்கு இப்படி வேர்த்துக் கொட்டறது!''



ஆனால், இந்திக்காரர்கள் தங்கள் தாய் மொழியான இந்தியைக் கற்றாலே போதுமானது! இது அநியாயமில்லையா?

இதில் ஏதோ ஒரு பெரிய சூதுத் திட்டம் அடங்கியிருப்பதாகக் கருதுகிறேன்.

மத்தியஅரசு — உத்தியோகங்கள் — குறிப்பாக எழுத்தர் உத்தியோகங்கள் அனைத்தையும் இந்தி பேசுவோரின் ஏகபோகம் ஆக்குவதற்கு நீங்கள் திட்டமிட்டுச் செயல்படுகிறீர்கள்.

மத்திய அரசின் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தேர்வுகளை 15 மொழிகளில் நடத்தும்போது இந்தத் தேர்வையும் அனைத்து மொழிகளிலும் நடத்துவதற்கென்ன?

அதனால்தான் நான் வலியுறுத்த விரும்புகிறேன் — மத்திய அரசு அலுவலகங்கள், அரசுடைமையாக்கப்பட்ட நிறுவனங்கள், ரயில்வேக்கள் இவைகள் எந்தெந்தப் பிராந்தியங்களில் இருக்கின்றனவோ அங்கு வழங்கும் மொழிகளிலேயே அவை பணியாற்ற வேண்டும். இந்தி தேவையே இல்லை!

அடுத்து, யூனியன் பப்ளிக் சர்வீஸ் தேர்வுகளை எடுத்துக் கொள்வோம். முதல் முறையாக எட்டாவது அட்டவணையில் உள்ள அனைத்து மொழிகளிலும் தேர்வுகளை எழுதலாம் — என்று கொண்டு வந்திருக்கிறீர்கள். இதற்காக மகிழ்ச்சியடைகிறேன்; அரசைப் பாராட்டுகிறேன்.

ஆனாலும், அதிலும் ஒரு விஷமத்தனத்தைப் புகுத்தியிருக்கிறீர்கள்!

கேள்வித்தாள்கள் ஆங்கிலத்திலும், இந்தியிலும் மட்டுமே இருக்கும் என்று ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்.

## வினாத்தாள் மாநில மொழியில் தயாரித்தால் என்ன?

—இதுதான் ஏனென்று எனக்குப் புரியவில்லை.

15 மொழிகளில் விடை எழுதலாம், ஆனால் அந்த 15 மொழிகளில் கேள்வித்தாள் இருக்காதாம்!

—இது என்ன நியாயம்?

மக்கள் அவையிலே ஓர் அமைச்சர் இதற்கான பதிலைக் கொடுத்திருக்கிறார்.

அப்படி அனைத்து மொழிகளிலும் கேள்வித்தாள் அமைந்தால் ஒரே மாதிரியான தரம் இருக்காதாம்!

—15 மொழிகளில் விடை அமைந்தால் ஒரே 'தரம்' இருக்கும்; அவற்றில் கேள்வித்தாள் அமைந்தால் ஒரே 'தரம்' இருக்காதா?

—இது நகைப்புக்கு இடமளிப்பதாக அல்லவா இருக்கிறது!

அமைச்சர் இன்னொரு காரணத்தையும் கூறியிருக்கிறார். 15 மொழிகளில் கேள்வித்தாள்களை அமைத்தால் இரகசியத்தைக் காப்பாற்ற முடியாதாம்!

—இது மேலும் நகைப்புக்கிடமான பதிலாக இருக்கிறது.

அந்தப் பதினைந்து மொழிகள் பல மாநிலங்களின் ஆட்சிமொழிகளாக இருக்கின்றன. அந்த மொழிகளில்தான் மாநிலங்களின் பட்ஜெட்டுகள் தயாரிக்கப்படுகின்றன.

—ஆனால், அதன் காரணமாக எந்த ஒரு மாநிலத்தின் பட்ஜெட்டும் 'அவுட்'டானதாக நாம் இதுவரை கேள்விப்படவில்லை.

அது மட்டுமல்ல, ஒவ்வொரு மாநிலமும் தனது மாநில மொழியில் தனது சர்வீஸ் கமிஷன் தேர்வுகளை நடத்துகிறது. அதனால் ரகசியம் அம்பலமாகி விட்டதாக எந்தவிதப் புகாரும் இல்லை.

—எனவேதான் உங்கள் நோக்கம் தூய்மையானதாக இருந்தால் நீங்கள் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தேர்வுகளின் கேள்வித் தாள்களை 15—மொழிகளிலும் அமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இதிலே இன்னொரு முக்கிய பிரச்னை இருக்கிறது.

மத்திய சர்வீஸ் கமிஷன் தேர்வுகளில் வெற்றியடைந்த பிறகு — அவர்கள் மத்திய அரசில் உத்தியோகம் வகிக்க நேரும்போது — எந்த மொழியில் பணியாற்றுவார்கள்?

பதினைந்து மொழிகளில் ஒன்றில் தேர்வு எழுதி வெற்றி பெற்று; உத்தியோகத்தில் அமர்ந்ததும் அவர்கள் இந்தியில்தான் பணியாற்ற வேண்டுமென்றால் அதை நாங்கள் மிகக் கடுமையாக எதிர்ப்போம் — என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

---

கிரிக்கெட் பந்தயங்களின் ஆரம்பத்தில் டாஸ் போடுகிறார்கள். எந்த காப்டன் ஜெயித்தார் என்பது தெரிவதில்லை. ரேடியோவில் டி. வி. யிலே, சமயத்தில் தவறாகச் சொல்லி விடுகிறார்கள்.

காப்டன்கள் டாஸ் போடும் போது மைதானத்திலே ஒரு கிரிக்கெட் பேட்டும் ஒரு கிரிக்கெட் பந்தும் வைக்கப் பட வேண்டும். டாஸ் ஜெயித்த காப்டன் பாட்டை எடுத்தால் பாட் செய்யப் போகிறார். பந்தை எடுத்தால் பௌலிங் செய்யப் போகிறார் என்பதை எல்லோரும் சுலபமாகத் தெரிந்து கொள்ள முடியும். ரேடியோ அறிவிப்பாளரும், சரியாகச் சொல்லி விடுவார். குழப்பம் இல்லாமல் இருக்கும்.

ஸ்போர்ட்ஸ் லோர்ஸ்ட்.
கே. ஆர்.






இளமையை ஊஞ்சலாட விட்டு உல்லாச மூட்டிய ஸ்ரீதர் இப்போது அழகைச் சிரிக்கவும் அழவும் விட்டு நம் சிந்தையைக் கவர்ந்திருக்கிறார். ஸ்ரீதர் படங்கள் என்றாலே அதில் இளமையும் அழகும் 'மூன் ஏஜ்' ரசிப்பும் இருக்கும். காட்சி ஜோடனைகளிலும் காஸ்ட்யூமிலும் கவனம் செலுத்தி இருப்பார். இதை அழகிலும் ஆராதனை செய்திருப்பதைக் கண்டு ரசிக்க முடிகிறது. துடுக்குத் தனம் என்றால் எப்படி இருக்கும், இருக்க வேண்டும் என்பதை சுபாஷிணி மூலம் காண்பித்திருக்கிறார் ஸ்ரீதர். வாணி (லதா) யின் காதலன் வேணு (ஜெய்கணேஷ்). இவ்விருவரின் நெருக்கமான காதலை முன்பாதியில் ரசமாகக் காட்டி இருக்கிறார். வாணியின் அழகில் மயங்கும் வாசு (விஜய குமார்) வின் முதல் சந்திப்பு புதுமையாகவும் பொருத்தமாகவும் உள்ளது. அதில் ஸ்ரீதரின் 'டச்'சைக் காண்கிறோம்.

படத்தின் ஆரம்பத்தில் உள்ள காதல், இளமை, சிரிப்பு ஆகியவற்றிற்குத் திருஷ்டி பரிகாரம் போலப் பின்பகுதியைச் சோகம் மூடிக் கொள்கிறது. வேணுவை மறக்க முடியாமல் வாணி பருவத் தவிப்பில் படும் அவஸ்தைகளை லதா பாராட்டும்படியாகவே செய்திருக்கிறார்.

சுபாஷிணிக்கு நல்ல எதிர்காலமிருக்கிறது— 'நாட்டி கேர்ள்' என்று செல்லமாகப் (படத்தில்) பல தடவை பலரால் அழைக்கப்பட்டாலும் 'ஷீ இஸ் ப்யூட்டி ஃபுல்!' திறமையோடு கூடிய அழகுதான்! அதேபோல சைக்கிள் ஆக்ஸிடெண்டில் காதலியைச் சந்திக்கும் பணக்காரப் பையனாக வரும் புதுமுகம் ஜெயப்பிரகாஷுக்கும் நல்ல எதிர்காலமிருக்கிறது.

கார் மெக்கானிக்காக வந்து தம்முடைய இயல்பான நடிப்பாலும் பேச்சாலும் படத்திற்குக் கல கலப்பூட்டுகிறார் நாகேஷ்.

வாலியின் பாடல்களுக்கு இளையராஜா இசையமைத்திருப்பது இனிமையாகவும் இதமாகவுமிருக்கிறது. கண்ணுக்கு விருந்தாக இயற்கை வளம்மிக்க லொகேஷன்களைத் தேர்ந்தெடுத்துக் காதலர்களின் பாடல் காட்சிகளைப் படமாக்கி இருப்பது ஸ்ரீதரின் ரசனையையும் காமிராமேன் திவாரியின் திறமையையும் வெளிப்படுத்துகின்றன.

ஆராதனை செய்யும் காதலனாக (வாசு) விஜயகுமார் ரொம்ப அடக்கமாகவும் அழகாகவும் செய்திருக்கிறார். கோவா கடற்கரையும் ஹிப்பிகளின் பாட்டும் கூத்தும் கொஞ்சம் ஓவர். பாதிப் படத்துக்கு மேல்தான் ஜெய்கணேஷ் வில்லனாக மாறுகிறார். கதையின் முடிவு முன்பே புரிந்து போனாலும் பரபரப்பாகவும் புதுமையாகவும் உள்ளது.

இளமைகளோடும் அழகுகளோடும் இப்படி ஸ்ரீதர் அடிக்கடி நம்மை உறவாட வைக்க வேண்டுமென்று விரும்புகிறோம். —கோபிகன்

# சாலை ஓரப் பிள்ளையார்!

## அன்னம்

ஸ்ரீ வன்று வேயன்று வியன்று செட்டியாரை உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை. நான் அறிமுகப் படுத்துகிறேன். அது நானேதான்!

இருபது வருடங்களுக்கு முன்பு நான் இந்த ஊருக்கு வந்தபோது என் பெயர் இப்படிக் குறிப்பிடப்படும் என்று நான் எதிர்பார்க்க வில்லை. ஒரு சைக்கிள் பின்னால் பெரிய கூடையில் அலுமினியப் பாத்திரங்களை வலையால் இழுத்துக் கட்டியபடி விற்று வந்தேன்.

இன்றைக்கு எனக்குச் சந்நிதித் தெருவில் பெரிய பாத்திரக்கடை இருக்கிறது. காந்தி நகரிலே ஒரு வீடு இருக்கிறது. எல்லாம் அந்தச் சாலை ஓரப் பிள்ளையாரின் அருள்தான்.

ஊரைத் தாண்டியதும் கடலூர் வேலூர் சாலையில் மின்சார சப்ஸ்டேஷன் எதிரில் அந்தப் பிள்ளையார் ஒரு சின்னக் கோவிலில் உட்கார்ந்து இருந்தார். எல்லா பஸ் டிரைவர்களும் முதல் டிரிப்பின் போது பஸ்ஸை அங்கு நிறுத்தி விட்டுக் காணிக்கை போட்ட பிறகுதான் புறப்படுவார்கள்.

நான் நிதர்சனமாகக் கண்டிருக்கிறேன். அன்றைக்குச் சைக்கிளில் போன போதும் சரி, இன்று பஸ்ஸில் போகும் போதும் சரி — அந்தப் பிள்ளையார் கோவில் முன்னால் இறங்கி, கன்னத்தில் போட்டுக் கொண்டு போனால் தான் போகும் காரியம் பலிதம் ஆகும். இல்லா விட்டால் நஷ்டம், மனக்கவலைதான் மிச்சம்.

இன்னும் விளக்கமாகச் சொல்கிறேன்: நான் மொத்தமாகச் சரக்கு எடுக்கும் இடத்துக்கு ஒருநாள் பிள்ளையாரைப் பார்க்காமல் போய் விட்டேன். எப்போதும் கடனுக்குச் சரக்குக் கொடுக்கும் அவர் — பழைய பாக்கிக்காக என் கழுத்தைப் பிடித்து நெரிக்க ஆரம்பித்து விட்டார்.

அதே செட்டியார் — இரண்டு மாதங்கள் கழித்து — மறக்காமல் அன்று பிள்ளையாரைக் கும்பிட்டு விட்டுப் போனேன் — எத்தனை அன்பாக, என் ஊர், தகப்பனார் பெயர் எல்லாம் விசாரித்தார். தம் பெண்ணை எனக்குக் காப்பி கொண்டு வரும்படி உத்தரவிட்டார். இன்றைக்கும் அவள்தான் எனக்குக் காப்பி கொண்டு வந்து தருகிறாள் — என் இல்லக் கிழத்தியாக. காப்பியின் ருசிமட்டும் அப்போது போல இப்போதும் மோசம்தான்!

என் முதல் குழந்தைக்குக் கடுமையான ஜுரம். பெரிய ஆஸ்பத்திரிக்கு அவசரமாக எடுத்துப் போனேன். பிள்ளையாரைத் தாண்டிப் போனவன் மறந்து விட்டேன். டாக்டர்கள் என்னவெல்லாமோ செய்தார்கள். ஊஹூம்! பிள்ளையை அப்படியே புதைத்து விட்டுத்தான் வீடு திரும்பினோம்!

ஊரில் ரொம்ப கெடுபிடி. கறுப்புப் பண சோதனை நடந்தது. பொறாமைக்காரர்கள் என் பெயரையும் கொடுத்தார்கள். ஐயோ! வந்தார்களே!... என் பிள்ளையாரப்பா! மனமார வேண்டினேன். பரணில் அந்த இடத்தில் அவர்கள் பார்த்தபோது என் மனம் பதைபதைத்தது. பிள்ளையார் காப்பாற்றினார். அந்தப் 'பெட்டி' அவர்கள் கண்ணில் படவில்லை.

திருப்பதிக்குக் குடும்பத்துடன் போகையில் பணப்பெட்டியை ரயிலில் வைத்து இறங்கி விட்டேன். ரயில் போய் விட்டது. எனக்கு என் பிள்ளையார் மேல் நம்பிக்கை. நானு சிதறுகாய் போட்டுவிட்டுத் தானே கிளம்பினேன்? பக்கத்து ஊர் ஸ்டேஷனுக்கு டெலிபோனில் தகவல் கொடுத்ததால், பெட்டி எதிர் ரயிலில் திரும்பி வந்து விட்டது.

நான் இப்போது ஊரில் பெரிய மனிதன். ஆளும் கட்சி, எதிர்க்கட்சி எல்லோரும் என்னிடம் நன்கொடை வாங்கிப் போகின்றார்கள். ஒரு கார் வாங்க வேண்டாமோ?... வாங்கி விட்டேன்.

காரை முதலில் பிள்ளையார் கோவிலுக்குத் தான் ஓட்டிப் போக வேண்டும் என்று தீர்மானம். ஆகவே குடும்பத்துடன் புறப்பட்டேன்.

அன்றைக்கு என ஒரே பேய்க்காற்று. நல்ல மழை. 'பக்கத்தில் தானே கோவில் இருக்கிறது' என்று முன் வைத்த காலைப் பின் வைக்காமல் புறப்பட்டேன்.

முன் இருக்கையில் நானும் டிரைவரும். பின்னால் என் மனைவி மற்றும் மூன்று குழந்தைகள். டிரைவர் நிதானமாக ஓட்டினார்.

கோவிலில் குருக்கள் காத்திருந்தார். நாங்கள் மெதுவாக இறங்கினோம். குருக்களால் விளக்கைக்கூட ஏற்ற முடியவில்லை. ஒரே சூறுவளிக் காற்று.

எப்படியோ பூஜை முடிந்தது. நாங்கள் திரும்பிக் காருக்கு வந்த சமயம்.

சடசடவென்று சப்தம். பிள்ளையார் கோவில் முன்னால் இருந்த பெரிய மரம் வேருடன் சாய்ந்து என் காரின் மீது விழுந்தது. அது தகர டப்பா போல் நொறுங்கிப் போயிற்று. கார் இன்னும் இன்ஷ்யூர் செய்யப் படவில்லை.

என் கண்களில் நீர் வடிந்தது. ''உன்னை மலை போல் நம்பி இருந்தேனே!... எத்தனை ஆசையுடன் உன் சந்நிதிக்கு வந்தேன்!... இப்படி அப்பளம் நொறுக்குவது போல்

லட்சம் ரூபாய்க் காரை நாசம் செய்து விட்டாயே!'' எனப் பதறினேன்.

என் மனைவி சொன்னாள். ''உங்கள் பிள்ளையார் நல்லவர்தான். நாம் உள்ளே இருந்த போது அந்த மரம் காரின் மீது விழுந்திருந்தால் நம் கதி என்ன?... நல்லவேளை!'' எனப் பெருமூச்சு விட்டாள்.

ஆனால் என் மனம் சாந்தி அடையவில்லை. பிள்ளையார் ஏமாற்றி விட்டதாகத்தான் நினைத்தேன்.

''எதற்கு இப்படி அலட்டிக் கொள்கிறீர்கள்?... சிரமப்பட்டு வந்த பணமா போச்சு?... பரண்மேல் மறைத்துப் பதுக்கிப் பயந்து பயந்து சேர்த்த பணம் தானே போயிற்று?... நமக்கு ஒட்டவில்லை!'' என அடித்தாற்போல் சொன்னாள்.

எனக்கு உறைத்தது. பரண் மேல் இருந்தது 'கறுப்புப்' பணம். யார் யாரையோ ஏமாற்றி வயிற்றில் அடித்துச் சேர்த்த பணம்.

சாலை ஓரத்துப் பிள்ளையார் என்னுடைய ''கூட்டாளி'' என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அவர் தான் ஒரு ''தெய்வம்'' என்பதை எனக்குக் காட்டி விட்டார்!





பி.மாதவன் பேட்டி

# படமல்ல; பாடம்!

சீருமமே கண்ணுபினுர் என்ற பழமொழி யாருக்குப் பொருந்துமோ இல்லையோ இயக்குனர் மாதவனுக்குச் சரியாகப் பொருந்தும். படப்பிடிப்பு நடக்கும் இடங்களில் தாம் உண்டு தம் வேலையுண்டு என்று இருப்பார்.

நான் கேட்கும் கேள்விகளுக்கு ஒரே வரியில் பதில் சொல்லி விடுவாரோ என்று பயந்து கொண்டுதான் அவரை அவருடைய வீட்டில் சந்திக்கச் சென்றேன். ஆனால் நான் எதிர்பார்த்ததற்கு மாருக திரு மாதவன் உற்சாகமாகப் பேசினுர்.

''திரைப்படம் பொழுது போக்குச் சாதனம் தானே?'' என்று என் முதல் கேள்வியைப் போட்டேன்.

''உண்மைதான். ஆனல் அதே சமயம் பொழுதை நல்லவிதமாகச் செலவழித்தோம் என்ற எண்ணமும் ரசிகர்களுக்கு ஏற்பட வேண்டும் இல்லையா? ஆகவே பொழுது போக்குடன் படிப்பினையும் இணைய வேண்டும் என்பது என் தனிப்பட்ட எண்ணம்.''

''உங்கள் டைரக்ஷனில் உருவான உங்களுக்கு மிகவும் பிடித்த படம் எது?''

'''வியட்நாம் வீடு'. அதன் முடிவில் வணக்கம் என்று போடுவதற்குப் பதிலாக ''இது படமல்ல. ஒரு பாடம்'' என்ற வாசகத்தைத்தான் நான் திரையில் காட்டினேன். ''இதேபோல் ''குழந்தைக்காக'' படத்திலும் ''இது கதையின் முடிவு; ஆனல்இவர்களுடைய வாழ்க்கையில் ஒரு புதிய சகாப்தம் ஆரம்பம்'' என்று திரையில் காட்டினேன்.''

'''வியட்நாம் வீடு' படம் உங்களுக்கு மிகவும் பிடித்ததற்கான காரணம்?''

''எத்தனையோ படங்களுக்கு இயக்குனராக இருந்தாலும் ஒரு சில படங்களில் மட்டும் தான் நம்மால் நம்மையே ஐக்கியப்படுத்திக் கொள்ள முடியும். அந்த வகையில் பார்த்தால் ''வியட்நாம்'' வீடு முன் நிற்கிறது. இயக்குனர்களோ, நடிகர் நடிகையரோ உணர்ச்சி வசப்படுவது அரிது. இப்படத்தின் ஷூட்டிங் போது பல சந்தர்ப்பங்களில் நான் 'கட்'' என்று சொல்ல முடியாமல் அழுதிருக்கிறேன்! என்னையுமறியாமல் பல இடங்களில் சிரித்துமிருக்கிறேன்! அந்த அளவுக்குப் படம் என்னை அசைத்திருக்கிறது.''

''உங்களுடைய படங்கள் எல்லாவற்றிலுமே Dramatic impact மிகுதியாக இருக்கிறதே?''

''Dramatic impactஐ உருவாக்குவது எனக்கு மிகவும் பிடிக்கும். இந்தப் படத்தில் வரும் பாடல்களைக் கூட அவற்றின் அழகு கெடாமல் பாட்டில் வரும் பதத்துக்கேற்பப் படமாக்கினேம். ''உன் கண்ணில் நீர் வழிந்தால்'' என்ற பாட்டு, அதற்கு ஓர் உதாரணம்.''

''பல காட்சிகள் இதில் உங்களை வயிக்க வைத்தாலும் நீங்கள் ரசித்த காட்சி எது?''





⌘ வியட்நாம் வீடு படத்தில் சிவாஜி கணேசன், பத்மினி, ஸ்ரீகாந்த்

''பிரஸ்டீஜ் பத்மநாபனுக்கு வேலை போய் விடுகிறது. வருத்தத்துடன் காரியாலயக் காரை வேண்டாமென்று சொல்லிவிட்டு வெளியே வருகிறார். வெளியே நிற்கும் கூர்க்கா சலாம் செய்து விட்டுக் கதவை மூடுகிறான். Symbolic காக அமைந்த இக் காட்சி முடிந்தவுடன் இடைவேளை என்று போட்டேன். இது எல்லோராலும் பாராட்டப்பட்டது. எனக்குப் பிடித்த பல காட்சிகளில் இந்த உருவகமும் ஒன்று.''

'' 'பிரஸ்டீஜ் பத்மநாபன் என்ன தவறு செய்தார் என்று அவரை நீங்கள் கடைசியில் சாகடித்து விட்டீர்கள்?' என்று பலர் கேட்டார்களாமே?''

''சந்தோஷமான முடிவு படவுலகைப் பொறுத்தவரை வழக்கமான முடிவுதான். வழக்கமான பாதையிலிருந்து மாறுபட்டு அதேசமயம் மக்கள் ஏற்கும்படியாகவும் இருக்க வேண்டுமென்பதுதான் எனது எண்ணம். துயர முடிவுதான் ரசிகர்களால் மறக்க முடியாதது.''

''படிப்பினை வேண்டுமென்று கூறுகிறீர்களே, உங்கள் படத்திலும் ஏதாவது பயன் ஏற்பட்டதா?''

''படம் ரிலீஸான சில நாட்களுக்குள் எனக்கொரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தை எழுதியது ஒரு பெண்.

'' 'என் காதலுக்குப் பெற்றோர்கள் சம்மதிப்பார்களா என்ற சந்தேகம் இருந்தது. யாருக்கும் தெரியாமல் ஓடிப்போய் வேறு ஊரில் திருமணம் செய்து கொள்ள முடிவு செய்தோம். இதன் பிறகு இருவருமே ''வியட்நாம் வீடு'' படம் பார்த்தோம். ஒவ்வொரு வசனமும் எங்கள் மனத்தில் ஆழப் பதிந்து எங்களுக்கு யாரோ அறிவுரை சொன்னது போல் இருந்தது. வீட்டைவிட்டு ஓடும் யோசனையைக் கைவிட்டோம். பெற்றோரிடம் எல்லா விவரங்களையும் சொல்ல முடிவு செய்தோம். நாங்கள் இப்படி மாறியதற்குக் காரணம் உங்கள் படம்தான்' என்று எழுதியிருந்தார்.''

''குடும்பப் பாங்கான கதைகளையே நீங்கள் அதிகம் தேர்ந்தெடுக்கிறீர்களே அது ஏன்?''

''பார்க்கும் படத்தினோடு ரசிகர் தம்மைத் தாமே ஐக்கியப் படுத்திக்கொள்ளவசதி செய்வது குடும்பப் பாங்கான கதை. நாம் அன்றாடம் சந்திக்கும் பிரச்னைகள் அதற்கான தீர்வுகள் இவைகளை எல்லாம் நிறைவாகக் குடும்பப்பாங்கான கதைகளில் கொடுக்கமுடியும்.''

''நீங்கள் 'உச்ச கட்ட காட்சியை நாடகத்தை விட அழகுபடுத்தி எடுத்தேன்' என்று ஒருமுறை கூறினீர்கள்; அது எப்படி?''

''பிரஸ்டீஜ்பத்மநாபனுக்குப் போனவேலை திரும்பவும் கிடைத்து விடுகிறது. தமது திறமையின்மேல் நம்பிக்கை வைத்து அழைத்திருக்கிறார்கள் என்ற மகிழ்ச்சி, தாம் முன் போல் பிரஸ்டீஜுடன் வாழலாம் என்ற நினைப்பு. ஆனால் அதிர்ச்சி தாளாமல் இறந்து விடுகிறார். அந்தக் குடும்பத்திலுள்ளவர்கள் அவரது இழப்பை உணர்ந்ததாகக் காட்ட வேண்டும். அதற்காக ஒவ்வொருவரையும் தனித்தனியாக Freeze பண்ணினேன். ஒவ்வொரு Freeze ஷாட்டிலும் சாட்டையடி ஓசைமட்டும் பின்னணியில் ஒலிக்கச் செய்தேன்.''

''கிளைமாக்ஸ் காட்சி பற்றித் தெரிந்து கொண்டதே இந்தப் பேட்டிக்கும் கிளைமாக்ஸாக இருக்கட்டும்'' என்று கூறி விடை பெற்றேன்.

—சலன்

# இதோ கேள்வித்தாள்கள்!

பி. எஸ். ஆர்

கல்லூரி ஆசிரியர்கள் போராட்டத்தில் ஈடுபட்டிருந்ததால், கேள்வித் தாள்களைப் பரீட்சைக்கு உரிய காலத்திற்குள் தயாரிக்க முடியாமல் போய்விடலாம். ஆகவே சிற்சில நபர்களைக் கேள்வித் தாள்களைத் தயார் செய்யும்படி கேட்டுக் கொண்டால் எந்த மாதிரி தயாரித்துத் தருவார்கள் என்று எண்ணிப் பார்த்ததின் விளைவு.



## ம.பொ.சி — தமிழ்

1. திருத்தணி, தேவிகுளம், பீர்மேடு ஆகியவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

2. இளங்கோ அடிகள் வரலாற்றைத் திரைப்படமாக எடுத்தால், சிலப்பதிகாரமாக யாரை நடிக்கச் செய்யலாம்? ஏன்?

3. இதுவரை கண்ணகியாக நடித்த திரை நட்சத்திரங்கள் யார் யார்? அவர்களைப் பற்றிச் சுருக்கமாக எழுதுக.

4. கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை — இந்தக் கருத்தை எந்த புலவர் எழுதினார்?

5. கடற்கரையில் உள்ள கண்ணகி சிலையை வடித்த சிற்பி யார்? சிலையை நிறுவ நன்கொடை கொடுத்தவர் யார்?

6. ஞானங்களில் சிறந்த ஞானம் எது?

7. பூம்புகாரில் சமீபத்தில் சிலப்பதிகாரக் காட்சியை அமைத்தவர் யார்? (இந்தக் கேள்வியை நீக்கி விடலாம் என்று யாராவது கருதினால், நீக்கி விடவும்.

## ராஜ்நாராயண் — சரித்திரம்

1. உலகப் புகழ் பெற்ற ரேபரேலி தேர்தலில் (1977) வெற்றி பெற்றவரின் இமாலய சாதனைகள் என்ன?

2. வின்ஸ்டன் சர்ச்சில், நேரு, சரண்சிங் ஆகிய மூவரின் நிர்வாகத் திறமைகளைப் பாராட்டி எழுதுக.

3. 'சிரித்தவர்கள் அதிக காலம் ஆண்டதில்லை' என்பதை விளக்குக.



4. அரசியல் கோமாளிகளில் யாராவது ஒருவரைப் பற்றி விரிவாக எழுதவும்.

5. டிசம்பர் 23'ம் தேதியை 'கிஸான் தினமாகக் கொண்டாடியதின் உலக முக்கியத்துவம் என்ன? மூன்று பக்கங்களுக்குக் குறையாமல் எழுதுக.

6. ''ஆ! எத்தனை ஆபாச படங்கள்!'' — வரலாற்றில் இடம்பெறும் இந்தவாக்கியத்தை யார் எந்த சந்தர்ப்பத்தில் கூறினார்கள்.

7. லோஹியா ஆஸ்பத்திரி, ஜே. பி. ஆஸ்பத்திரி என்ற பெயர் மாற்றங்களால் இந்திய சுகாதார வரலாற்றில் ஏற்பட்ட ஒப்பற்ற முன்னேற்றங்களை விரிவாகக் குறிப்பிடவும் (கற்பனைக்கு மார்க் உண்டு!)



## மொரார்ஜிதேசாய் — விஞ்ஞானம்

1. ''நம் வியாதிகளுக்கு நம் உடலிலேயே மருந்து இருக்கிறது'' — மருந்து என்ன? உட்கொள்ள வேண்டிய முறை என்ன?

2. ஆர். எஸ். எஸ். என்ற வைட்டமின் சக்தி நாடு என்ற உடலுக்கு எப்படித் தேவை?

3. சிக்மகளூரில் தேர்தல் கொட்டினால் டில்லியில் நெறி கட்டுவதை உடற்கூறு அடிப்படையில் விளக்கம் கூறுக.

4. 19 மாதம் சிறையில் இருந்தால் சாதாரண மனிதன், பிரதம மந்திரியாக மாறுவதை — இந்த விஞ்ஞான மாற்றத்தைப் படங்களுடன் விவரிக்கவும்.

5. நாட்டுக்கு எப்படி இரண்டு துணைப் பிரதமர் அவசியமோ அம்மாதிரியே மனித உடலுக்கு இரண்டு சிறு நீரகங்கள் அவசியம் என்பதைப் புகழ்பெற்ற விஞ்ஞானிகள் 'மொரார் — சரண்' ஆகியவர்களின் கடிதங்களிலிருந்து எப்படி உணருகிறீர்கள்?

(மற்ற கேள்வித் தாள்கள், இந்த இதழ் அச்சுக்குப்போகும் வரை கிடைக்கவில்லை. அவை அடுத்த இதழில் பிரசுரமாகா!)

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

# கல்கி

REGISTERED No. : M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் கா

KALKI 8-4-79
75 காசு

